

நம்மாழ்வார்

ஸ்ரீய:பதியின் திருவடிகளிலே அடிமைசெய்து உஜ்ஜீவி என்று தம் திருவுள்ளத்தைக் குறித்து உரைத்தல்.

நம்மாழ்வார் அருளிச்செய்த

# கோயில் திருவாய்மொழி

தனியன்கள்

(நாதமுனிகள் அருளிச்செய்தது)

பக்தாம்ருதம் விஶ்வஜநாநுமோதநம்
ஸர்வார்த்ததம் ஶ்ரீஶடகோபவாங்மயம் ।
ஸஹஸ்ரஶாகோபநிஷத்ஸமாகமம்
நமாம்யஹம் த்ராவிடவேதஸாகரம் ॥

பக்தாம்ருதம்விஸ்வஜநாநுமோதநம்-ஸர்வார்த்ததம்ஸ்ரீசடகோபவாங்மயம்
ஸஹஸ்ரஸாகோபநிஷத்ஸமாகமம்-நமாம்யஹம்த்ராவிடவேதஸாகரம்.

(ஈசுவரமுனிகள் அருளிச்செய்தது)

இருவிகற்ப நேரிசை வெண்பா.

திருவழுதி நாடென்றும் தென்குருகூ ரென்றும் *
மருவினிய வண்பொருந லென்றும் *—அருமறைக
ளந்தாதி செய்தா னடியிணையே எப்பொழுதும் *
சிந்தியாய் நெஞ்சே! தெளிந்து.

(சொட்டைநம்பிகள் அருளிச்செய்தது)

மனத்தாலும் வாயாலும் வண்குருகூர் பேணும் *
இனத்தாரை யல்லா திறைஞ்சேன் *—தனத்தாலும்
ஏதும் குறைவிலேன் எந்தை சடகோபன் *
பாதங்கள் யாமுடைய பற்று.

(அனந்தாழ்வான் அருளிச்செய்தது)

ஏய்ந்த பெருங்கீர்த்தி இராமாநுச முனிதன் *
வாய்ந்த மலர்ப்பாதம் வணங்குகின்றேன் *—ஆய்ந்தபெருஞ்
சீரார் சடகோபன் செந்தமிழ்வே தந்தரிக்கும் *
பேராத வுள்ளம் பெற.

(பட்டர் அருளிச்செய்தவை)

வான்திகழும் சோலை மதிளரங்கர் வண்புகழ்மேல் *
ஆன்ற தமிழ்மறைக ளாயிரமும் *—ஈன்ற
முதல்தாய் சடகோபன் மொய்ம்பால் வளர்த்த *
இதத்தாய் இராமாநுசன்.
மிக்க இறைநிலையும் மெய்யாம் உயிர்நிலையும் *
தக்க நெறியும் தடையாகித்—தொக்கியலும் *
ஊழ்வினையும் வாழ்வினையும் ஓதும் குருகையர்கோன் *
யாழினிசை வேதத் தியல்.

## திருவாய்மொழி, முதற்பத்து, முதல்திருவாய்மொழி.

கலி விருத்தம்

கமாஸ்ராகம்-ஆதிதாளம்.

$ உயர்வறவுயர்நலம் உடையவன்எவனவன் *
மயர்வறமதிநலம் அருளினன்எவனவன் *
அயர்வறுமமரர்கள் அதிபதிஎவனவன் *
துயரறுசுடரடி தொழுதெழுஎன்மனனே! 1

மனனகமலமற மலர்மிசையெழுதரும் *
மனனுணர்வளவிலன் பொறியுணர்வவையிலன் *
இனனுணர்முழுநலம் எதிர்நிகழ்கழிவினும் *
இனனிலனெனனுயிர் மிகுநரையிலனே. 2

இலனதுவுடையனி தெனநினைவரியவன் *
நிலனிடைவிசும்பிடை உருவினன்அருவினன் *
புலனொடுபுலனலன் ஒழிவிலன்பரந்த * அந்
நலனுடையொருவனை நணுகினம்நாமே. 3

நாமவனிவனுவன் அவளிவளுவளெவள் *
தாமவரிவருவர் அதுவிதுவுதுவெது *
வீமவையிவையுவை அவைநலம்தீங்கவை *
ஆமவையாயவை யாய்நின்றஅவரே. 4

அவரவர்தமதமது அறிவறிவகைவகை *
அவ்வரவரிறையவர் எனவடியடைவர்கள் *
அவரவரிறையவர் குறைவிலர்இறையவர் *
அவரவர்விதிவழி அடையநின்றனரே. 5

நின்றனர்இருந்தனர் கிடந்தனர்திரிந்தனர் *
நின்றிலர்இருந்திலர் கிடந்திலர்திரிந்திலர் *
என்றுமோரியல்வினர் எனநினைவரியவர் *
என்றுமோரியலொடு நின்றவெந்திடரே. 6

திடவிசும்பெரிவளி நீர்நிலமிவைமிசை *
படர்பொருள்முழுவதுமாய் அவையவைதொறும் *
உடல்மிசையுயிரெனக் கரந்தெங்கும்பரந்துளன் *
சுடர்மிகுசுருதியுள் இவையுண்டசுரனே. 7

சுரரறிவருநிலை விண்முதல்முழுவதும் *
வரன்முதலாயவை முழுதுண்டபரபரன் *
புரமொருமூன்றெரித்து அமரர்க்குமறிவியந்து *
அரனயனென உலகழித்தமைத்துளனே. 8

உளனெனிலுளன் அவனுருவம்இவ்வுருவுகள் *
உளனலனெனில் அவனருவம்இவ்வருவுகள் *
உளனெனஇலனென இவைகுணமுடைமையில் *
உளனிருதகைமையொடு ஒழிவிலன்பரந்தே. 9

பரந்ததண்பரவையுள் நீர்தொறும்பரந்துளன் *
பரந்தவண்டமிதென நிலவிசும்பொழிவற *
கரந்தசிலிடந்தொறும் இடந்திகழ்பொருள்தொறும் *
கரந்தெங்கும்பரந்துளன் இவையுண்டகரனே. 10

§ கரவிசும்பெரிவளி நீர்நிலமிவைமிசை
வரனவில்திறல்வலி அளிபொறையாய்நின்ற *
பரனடிமேல்குருகூர்ச்சடகோபன்சொல் *
நிரனிறையாயிரத்து இவைபத்தும்வீடே. 11

நம்மாழ்வார் திருவடிகளே சரணம்.

---

இதர விஷயங்களைவிட்டு பகவத்பக்தியைப்பண்ணி ஸ்ரீய:பதியை உஜ்ஜீவியுங்கோள் என்றுபரரைக்குறித்து உபதேசிக்கிறார்.

---

## திருவாய்மொழி, முதற்பத்து, ௨-ஆம் திருவாய்மொழி

### வஞ்சித்துறை

செஞ்சுருட்டிராகம்-அடதாளம்.

$ வீடுமின்முற்றவும் *
வீடுசெய்து * உம்முயிர்
வீடுடையானிடை *
வீடுசெய்ம்மினே. 1

மின்னின்நிலையில *
மன்னுயிராக்கைகள் *
என்னுமிடத்து * இறை
உன்னுமின்நீரே. 2

நீர்நுமதென்றிவை *
வேர்முதல்மாய்த்து * இறை
சேர்மின் * உயிர்க்குஅதன்
நேர்நிறையில்லே. 3

இல்லதும்உள்ளதும் *
அல்லதுஅவனுரு *
எல்லையில்அந்நலம் *
புல்குபற்றற்றே. 4

அற்றதுபற்றெனில் *
உற்றதுவீடுஉயிர் *
செற்றதுமன்னுறில் *
அற்றிறைபற்றே. 5

பற்றிலனீசனும் *
முற்றவும்நின்றனன் *
பற்றிலையாய் * அவன்
முற்றிலடங்கே. 6

அடங்கெழில்சம்பத்து *
அடங்கக்கண்டு * ஈசன்
அடங்கெழிலஃதென்று
அடங்குகஉள்ளே. 7

உள்ளமுரைசெயல் *
உள்ளஇம்மூன்றையும் *
உள்ளிக்கெடுத்து * இறை
உள்ளிலொடுங்கே. 8

ஒடுங்கஅவன்கண் *
ஒடுங்கலுமெல்லாம் *
விடும்பின்னும்ஆக்கை *
விடும்பொழுதுஎண்ணே. 9

$ எண்பெருக்கந்நலத்து *
ஒண்பொருளீறில *
வண்புகழ்நாரணன் *
திண்கழல்சேரே. 10

$ சேர்த்தடத் * தென்குரு
கூர்ச்சடகோபன்சொல் *
சீர்த்தொடையாயிரத்து *
ஓர்த்தஇப்பத்தே. 11

நம்மாழ்வார் திருவடிகளே சரணம்.

இளமை கெடுவதன்முன்னம் திருமாலிருஞ்சோலைமலையைச்
சேர்ந்து உய்யப் பெறுமாறு உபதேசிக்கிறார்.

திருவாய்மொழி, 2-ஆம் பத்து, 10-ஆம் திருவாய்மொழி.

கலிவிருத்தம்.

கேதாரகௌளராகம்-ஆதிதாளம்.

$ கிளரொளியிளமை கெடுவதன்முன்னம் *
வளரொளிமாயோன் மருவியகோயில் *
வளரிளம்பொழில்சூழ் மாலிருஞ்சோலை *
தளர்விலராகில் சார்வதுசதிரே. 1

சதிரிளமடவார் தாழ்ச்சியைமதியாது *
அதிர்குரல்சங்கத்து அழகர்தம்கோயில் *
மதிதவழ்குடுமி மாலிருஞ்சோலை *
பதியதுவேத்தி எழுவதுபயனே. 2

பயனல்லசெய்து பயனில்லைநெஞ்சே! *
புயல்மழைவண்ணர் புரிந்துறைகோயில் *
மயல்மிகுபொழில்சூழ் மாலிருஞ்சோலை *
அயல்மலையடைவது அதுகருமமே. 3

கருமவன்பாசம் கழித்துழன்றுய்யவே *
பெருமலையெடுத்தான் பீடுறைகோயில்
வருமழைதவழும் மாலிருஞ்சோலை *
திருமலையதுவே அடைவதுதிறமே. 4

திறமுடைவலத்தால் தீவினைபெருக்காது
அறமுயலாழிப் படையவன்கோயில் *
மறுவில்வண்சுனைசூழ் மாலிருஞ்சோலை *
புறமலைசாரப் போவதுகிறியே. 5

கிறியெனநினைமின் கீழ்மைசெய்யாதே *
உறியமர்வெண்ணெய் உண்டவன்கோயில் *
மறியொடுபிணைசேர் மாலிருஞ்சோலை *
நெறிபடஅதுவே நினைவதுநலமே. 6

நலமெனநினைமின் நரகழுந்தாதே *
நிலமுனம்இடந்தான் நீடுறைகோயில் *
மலமறுமதிசேர் மாலிருஞ்சோலை *
வலமுறையெய்தி மருவுதல்வலமே. 7

வலம்செய்துவைகல் வலம்கழியாதே *
வலம்செய்யும் ஆயமாயவன்கோயில் *
வலம்செய்யும்வானோர் மாலிருஞ்சோலை *
வலம்செய்துநாளும் மருவுதல்வழக்கே. 8

வழக்கெனநினைமின் வல்வினைமூழ்காது *
அழக்கொடியட்டான் அமர்பெருங்கோயில் *
மழக்களிற்றினம்சேர் மாலிருஞ்சோலை *
தொழக்கருதுவதே துணிவதுசூதே. 9

சூதென்றுகளவும் சூதும்செய்யாதே *
வேதம்முன்விரித்தான் விரும்பியகோயில் *
மாதுறுமயில்சேர் மாலிருஞ்சோலை *
போதவிழ்மலையே புகுவதுபொருளே. 10

$ பொருளென்றுஇவ்வுலகம் படைத்தவனபுகழ்மேல் *
மருளில்வண்குருகூர் வண்சடகோபன் *
தெருள்கொள்ளச்சொன்ன ஓராயிரத்துள்இப்பத்து *
அருளுடையவன்தாள் அணைவிக்கும்முடித்தே. 11

நம்மாழ்வார் திருவடிகளே சரணம்

---

தெற்குத்திருமலையில் தாமநுபவிக்கக்கோலி, பெறாதுசோதிக்கிற ஆழ்வார்க்கு ஈஸ்வரன் வடக்குத்திருமலையைக்காட்டக் கண்டு நிலைபெறுகிறார்.

திருவாய்மொழி, 3-ஆம் பத்து, 3-ஆம் திருவாய்மொழி

கலி விருத்தம்

ஸௌராஷ்ட்ரராகம்-அடதாளம்.

$ ஒழிவில்காலமெல்லாம் உடனாய்மன்னி *
வழுவிலா அடிமைசெய்யவேண்டும்நாம் *
தெழிகுரலருவித் திருவேங்கடத்து *
எழில்கொள்சோதி எந்தைதந்தைதந்தைக்கே. 1

எந்தைதந்தைதந்தை தந்தைதந்தைக்கும்
மூந்தை * வானவர்வானவர்கோனொடும் *
சிந்துபூமகிழும் திருவேங்கடத்து *
அந்தமில்புகழ்க் காரெழிலண்ணலே. 2

அண்ணல்மாயன் அணிகொள்செந்தாமரைக்
கண்ணன் * செங்கனிவாய்க் கருமாணிக்கம் *
தெண்ணிறைச்சுனைநீர்த் திருவேங்கடத்து *
எண்ணில்தொல்புகழ் வானவரீசனே. 3

ஈசன்வானவர்க்கு என்பன்என்றால் * அது
தேசமோ திருவேங்கடத்தானுக்கு? *
நீசனேன் நிறைவொன்றுமிலேன் * என்கண்
பாசம்வைத்த பரஞ்சுடர்ச்சோதிக்கே. 4

சோதியாகி எல்லாவுலகும்தொழும் *
ஆதிமூர்த்தியென்றால் அளவாகுமோ? *

வேதியர் முழுவேதத்தமுதத்தை *
தீதில்சீர்த் திருவேங்கடத்தானையே. 5
வேங்கடங்கள் மெய்ம்மேல்வினைமுற்றவும் *
தாங்கள் தங்கட்கு நல்லனவேசெய்வார் *
வேங்கடத்துறைவார்க்கு நமவென்ன
லாம்கடமைஅது * சுமந்தார்கட்கே. 6
சுமந்துமாமலர் நீர்சுடர்தூபம்கொண்டு *
அமர்ந்துவானவர் வானவர்கோனொடும் *
நமன்றெழும் திருவேங்கடம்நங்கட்கு *
சமன்கொள்வீடுதரும் தடங்குன்றமே. 7
$ குன்றமேந்திக் குளிர்மழைகாத்தவன்
அன்றுஞாலம் அளந்தபிரான் * பரன்
சென்றுசேர் திருவேங்கடமாமலை *
ஒன்றுமேதொழ நம்வினைஓயுமே. 8
ஓயும்மூப்புப் பிறப்பிறப்புப்பிணி *
வீயுமாறுசெய்வான் திருவேங்கடத்தாயன் *
நாள்மலராம் அடித்தாமரை *
வாயுள்ளும்மனத்துள்ளும் வைப்பார்கட்கே. 9
வைத்தநாள்வரை எல்லைகுறுகிச்சென்று *
எய்த்திளைப்பதன்முன்னம அடைமினோ *
பைத்தபாம்பணையான் திருவேங்கடம் *
மொய்த்தசோலை மொய்பூந்தடம்தாழ்வரே. 10
$ தாள்பரப்பி மண்தாவியஈசனை *
நீள்பொழில் குருகூர்ச்சடகோபன்சொல் *
கேழிலாயிரத்து இப்பத்தும்வல்லவர் *
வாழ்வர்வாழ்வெய்தி ஞாலம்புகழவே. 11

நம்மாழ்வார் திருவடிகளே சரணம்.

§ குறைதீர்ந்தஇவர், இதரவிஷயங்களை ஸ்தோத்ரம்செய்யாதே "திருநாரணன் திருவடியைப் பஜியுங்கோள்" என்று உபதேசிக்கிறார்.



திருவாய்மொழி, 4-ஆம் பத்து, 1-ஆம் திருவாய்மொழி

கலி நிலைத்துறை

சுருட்டி ராகம்- திரிபுடை தாளம்

$ ஒருநாயகமாய் ஓடவுலகுடனாண்டவர்
கருநாய்கவர்ந்தகாலர் சிதைகியபானையர் *
பெருநாடுகாண இம்மையிலேபிச்சைதாம்கொள்வர் *
திருநாரணன்தாள் காலம்பெறசிந்தித்துய்ம்மினோ. 1

§ இத்திருவாய்மொழி திருநாரணன் விஷயமாகையால், திருநாராயணபுர முதலான மேனாட்டுத் திவ்ய தேசங்களில் வழங்குகிறார்கள்.

உய்ம்மின்திறைகொணர்ந்தென்றுலகாண்டவர் * இம்மையே
தம்மின்சுவைமடவாரைப்பிறர்கொள்ளத்தாம்விட்டு *
வெம்மின்ஒளிவெயில்கானகம்போய்க்குமைதின்பர்கள் *
செம்மின்முடித்திருமாலைவிரைந்தடிசேர்மினோ. 2

அடிசேர்முடியினராகி அரசர்கள்தாம்தொழ *
இடிசேர்முரசங்கள் முற்றத்தியம்பஇருந்தவர் *
பொடிசேர்துகளாய்ப்போவர்கள் ஆதலில்நொக்கென *
கடிசேர்துழாய்முடிக் கண்ணன் கழல்கள் நினைமினோ. 3

நினைப்பான்புகின் கடலெக்கலின்நுண்மணலின்பலர் *
எனைத்தோருகங்களும் இவ்வுலகாண்டுகழிந்தவர் *
மனைப்பால்மருங்கற மாய்தலல்லால்மற்றுக்கண்டிலம் *
பனைத்தாள்மதகளிறட்டவன் பாதம்பணிமினோ. 4

பணிமின்திருவருளென்னும் அஞ்சீதப்பைம்பூம்பள்ளி *
அணிமென்குழலார் இன்பக்கலவியமுதுண்டார் *
துணிமுன்புநாலப் பல்லேழையர்தாமிழிப்பச்செல்வர் *
மணிமின்னுமேனி நம்மாயவன்பேர்சொல்லிவாழ்மினோ. 5

வாழ்ந்தார்கள்வாழ்ந்தது மாமழைமொக்குளின்மாய்ந்துமாய்ந்து *
ஆழ்ந்தாரென்றல்லால் அன்றுமுதலின்றறுதியா *
வாழ்ந்தார்கள்வாழ்ந்ததப்போதும் பலரில்லை, நிற்குறில் *
ஆழ்ந்தார்கடற்பள்ளி அண்ணலடியவராமினோ. 6

ஆமின்சுவையவை ஆறோடடிசிலுண்டார்ந்தபின் *
தூமென்மொழிமடவாரிரக்கப் பின்னும்துற்றுவார் *
ஈமினெமக்கொருதுற்றென்று இடறுவராதலின் *
கோமின்துழாய்முடி ஆதியஞ்சோதிகுணங்களே. 7

குணங்கொள்நிறைபுகழ்மன்னர் கொடைக்கடன்பூண்டிருந்து *
இணங்கியுலகுடனாக்கிலும் ஆங்கவனையில்லார் *
மணங்கொண்டபோகத்துமன்னியும் மீள்வர்கள்மீள்வில்லை *
பணங்கொளரவணையான் திருநாமப்படிமினோ. 8

படிமன்னுபல்கலன் பற்றோடறுத்துஐம்புலன்வென்று *
செடிமன்னுகாயம்செற்றார்களும் ஆங்கவனையில்லார் *
குடிமன்னுமின்சுவர்க்கமெய்தியும் மீள்வர்கள்மீள்வில்லை *
கொடிமன்னுபுள்ளுடை அண்ணல்கழல்கள்குறுகுமினோ. 9

குறுகமிகவுணர்வத்தொடுநோக்கி எல்லாம்விட்ட *
இறுகலிறப்பென்னும்ஞானிக்கும் அப்பயனில்லையேல் *
சிறுகநினைவதோர்பாசமுண்டாம் பின்னும்வீடில்லை
மறுகலிலீசனைப்பற்றி விடாவிடில்வீடஃதே. 10

$ அஃதே உய்யப்புகுமாறென்று கண்ணன்கழல்கள்மேல் *
கொய்பூம்பொழில்சூழ் குருகூர்ச்சடகோபன் குற்றேவல்கள் *
செய்கோலத்தாயிரம் சீர்த்தொடைப்பாடலிவைபத்தும் *
அஃகாமல்கற்பவர் ஆழ்துயர்போயுய்யற்பாலரே. 1

நம்மாழ்வார் திருவடிகளே சரணம்.

---

இதரதேவதைகள் பக்கல் உண்டான பரத்வசங்கையை அறுத்து
ஸர்வஸ்ருஷ்டாவான நாராயணன் தான் ஸந்நிதிகொண்டு
திருநகரியிலே ஸந்நிஹிதமானதுகையால் அவனை
ஆஸ்ரயியுங்கோள் என்று அருளிச்செய்கிறார்.

---

திருவாய்மொழி-4-ஆம்-பத்து, 10-ஆம்-திருவாய்மொழி
அறுசீராசிரிய விருத்தம்
சுருட்டிராகம் - ரூபகதாளம்

$ ஒன்றும்தேவும்உலகும்உயிரும் மற்றும்யாதுமில்லா
அன்று * நான்முகன் தன்னொடுதேவருலகோடு உயிர்படைத்தான்
குன்றம்போல்மணிமாடநீடு திருக்குருகூரதனுள்
நின்றஆதிப்பிரான்நிற்க மற்றைத்தெய்வம்நாடுதிரே. 1

நாடிநீர்வணங்கும்தெய்வமும் உம்மையும்முன்படைத்தான் *
வீடில்சீர்ப்புகழாதிப்பிரான் அவன்மேவியுறைகோயில் *
மாடமாளிகைசூழ்ந்தழகாய திருக்குருகூரதனை *
பாடியாடிப்பரவிச்சென்மின்கள் பல்லுலகீர்! பரந்தே. 2

பரந்ததெய்வமும்பல்லுலகும்படைத்து அன்றுடனேவிழுங்கி *
கரந்துமிழ்ந்துகடந்திடந்தது கண்டும்தெளியகில்லீர் *
சிரங்களால்அமரர்வணங்கும் திருக்குருகூரதனுள் *
பரன்திறமன்றிப்பல்லுலகீர்! தெய்வம்மற்றில்லைபேசுமினே. 3

பேசநின்றசிவனுக்கும்பிரமன் தனக்கும்பிறர்க்கும்
நாயகன்அவனே * கபாலநன்மோக்கத்துக் கண்டுகொண்மின் *
தேசமாமதில்சூழ்ந்தழகாய திருக்குருகூரதனுள் *
ஈசன்பால்ஓரவம்பறைதல் என்னாவதுஇலிங்கியர்க்கே? 4

இலிங்கத்திட்டபுராணத்தீரும் சமணரும்சாக்கியரும் *
§ வலிந்துவாதுசெய்வீர்களும் மற்றுநுந்தெய்வமுமாகிநின்றான் *
மலிந்துசெந்நெல்கவரிவீசும் திருக்குருகூரதனுள் *
பொலிந்துநின்றபிரான்கண்டீர் ஒன்றும்பொய்யில்லைபோற்றுமினே. 5

போற்றிமற்றோர்தெய்வம் பேணப்புறத்திட்டு * உம்மைஇன்னே
தேற்றிவைத்ததுஎல்லீரும் வீடுபெற்றால்உலகில்லையென்றே *
சேற்றில்செந்நெல்கமலமோங்கு திருக்குருகூரதனுள் *
ஆற்றவல்லவன்மாயங்கண்டீர் அதறிந்தறிந்தோடுமினே. 6

---

§ 'மலிந்து' என்றும் பாடாந்தரம்.

ஓடியோடிப்பலபிறப்பும்பிறந்து மற்றோர்தெய்வம் *
பாடியாடிப்பணிந்து பல்படிகால்வழியேறிக்கண்டீர் *
கூடிவானவரேத்தநின்ற திருக்குருகூரதனுள் *
ஆடுபுட்கொடியாதிமூர்த்திக்கு அடிமைபுகுவதுவே. 7

புக்கடிமையினால்தன்னைக்கண்ட மார்க்கண்டேயனவனை *
நக்கபிரானும்அன்றுய்யக்கொண்டது நாராயணனருளே *
கொக்கலர்தடந்தாழைவேலித் திருக்குருகூரதனுள் *
மிக்கஆதிப்பிரான்நிற்க மற்றைத்தெய்வம்விளம்புதிரே. 8

விளம்பும்ஆறுசமயமும் அவையாகியும்மற்றும்தன்பால் *
அளந்துகாண்டற்கரியனாகிய ஆதிப்பிரானமரும் *
வளங்கொள்தண்பணைசூழ்ந்தழகாய திருக்குருகூரதனை *
உளங்கொள்ஞானத்துவைம்மின் உம்மையுய்யக்கொண்டுபோகுறிலே.

உறுவதாவதெத்தேவும் எவ்வுலகங்களும்மற்றும்தன்பால் *
மறுவில்மூர்த்தியோடொத்து இத்தனையும்நின்றவண்ணம்நிற்கவே *
செறுவில்செந்நெல்கரும்பொடோங்கு திருக்குருகூரதனுள் *
குறியமாணுருவாகிய நீள்குடக்கூத்தனுக்காட்செய்வதே. 10

$ ஆட்செய்தாழிப்பிரானைச்சேர்ந்தவன் வண்குருகூர்நகரான் *
நாள்கமழ்மகிழ்மாலைமார்பினன் மாறன்சடகோபன் *
வேட்கையால்சொன்னபாடல் ஆயிரத்துள்இப்பத்தும்வல்லார் *
மீட்சியின்றிவைகுந்தமாநகர் மற்றதுகையதுவே. 11

நம்மாழ்வார் திருவடிகளே சரணம்.

---

ஈசுவரன் தர்ஸநஸ்பர்ஸந வார்த்தைகளொன்றும் செய்யாமை

யாலேயுக்கு தம்மபேக்ஷிதங்களைக் கிட்டுவோமென்று

கிட்டாமல் அவஸந்நராகிறார்.

---

திருவாய்மொழி-5-ஆம்-பத்து, 8-ஆம்-திருவாய்மொழி.

அறுசீராசிரிய விருத்தம்

தந்யாசிராகம் - ஆதிதாளம்.

$ ஆராவமுதே! அடியேனுடலம் நின்பால்அன்பாயே *
நீராயலைந்துகரைய உருக்குகின்றநெடுமாலே! *
சீரார்செந்நெல்கவரிவீசும் செழுநீர்த்திருக்குடந்தை *
ஏரார்கோலந்திகழக்கிடந்தாய்! கண்டேன்எம்மானே!. 1

எம்மானே! என்வெள்ளைமூர்த்தி! என்னையாள்வானே! *
எம்மாவுருவும்வேண்டுமாற்றால் ஆவாய்! எழிலேறே! *
செம்மாகமலம் செழுநீர்மிசைகண்மலரும் திருக்குடந்தை *
அம்மாமலர்க்கண்வளர்கின்றானே! என்நான்செய்கேனே?. 2

என்நான்செய்கேன் யாரேகளைகண்? என்னையென்செய்கின்றாய்? *
உன்னாலல்லால்யாவராலும் ஒன்றுங்குறைவேண்டேன் *
கன்னார்மதிள்சூழ்குடந்தைக்கிடந்தாய்! அடியேனருவாழ்நாள் *
சென்னாளெந்நாள்? அந்நாள் உனதாள்பிடித்தேசெலக்காணே. 3

செலக்காண்கிற்பார்காணுமளவும் செல்லுங்கீர்த்தியாய்! *
உலப்பிலானே! எல்லாவுலகுமுடையவொருமூர்த்தி! *
நலத்தால்மிக்கார்குடந்தைக்கிடந்தாய்! உன்னைக்காண்பான்நான்
அலப்பாய் * ஆகாசத்தைநோக்கி அழுவன்தொழுவனே. 4

அழுவன்தொழுவன் ஆடிக்காண்பன் பாடியலற்றுவன் *
தழுவல்வினையால்பக்கம்நோக்கி நாணிக்கவிழ்ந்திருப்பன் *
செழுவொண்பழனக்குடந்தைக்கிடந்தாய்! செந்தாமரைக்கண்ணா! *
தொழுவனேனைஉனதாள் சேரும்வகையேசூழ்கண்டாய். 5

சூழ்கண்டாய்! என்தொல்லைவினையையறுத்து உன்னடிசேரும்
ஊழ்கண்டிருந்தே * தூராக்குழிதூர்த்துஎனைநாள்அகன்றிருப்பன்? *
வாழ்தொல்புகழார்குடந்தைக்கிடந்தாய்! வானோர்கோமானே! *
யாழினிசையே! அமுதே! அறிவின்பயனே! அரியேறே!. 6

அரியேறே! என்னம்பொற்சுடரே! செங்கண்கருமுகிலே! *
எரியேபவளக்குன்றே! நால்தோளெந்தாய்! உனதருளே *
பிரியாவடிமையென்னைக்கொண்டாய்! குடந்தைத்திருமாலே! *
தரியேன்இனிஉன்சரணம்தந்து என்சன்மங்களையாயே. 7

$ களைவாய்துன்பம்களையாதொழிவாய் களைகண்மற்றிலேன்*
வளைவாய்நேமிப்படையாய்! குடந்தைக்கிடந்தமாமாயா! *
தளராவுடலம்எனதாவி சரிந்துபோம்போது *
இளையாதுஉனதாள்ஒருங்கப்பிடித்துப் போதஇசைநீயே. 8

இசைவித்துஎன்னைஉன்தாளிணைக்கீழ் இருத்தும்அம்மானே! *
அசைவிலமரர்தலைவர்தலைவா! ஆதிப்பெருமூர்த்தி! *
திசைவில்வீசும்செழுமாமணிகள்சேரும் திருக்குடந்தை *
அசைவிலுலகம்பரவக்கிடந்தாய்! காணவாராயே. 9

வாராவருவாய்வருமென்மாயா! மாயாமூர்த்தியாய்! *
ஆராவமுதாய்அடியேனாவி யகமேதித்திப்பாய்! *
தீராவினைகள்தீரஎன்னையாண்டாய்! திருக்குடந்தை
ஊரா! * உனக்காட்படும் அடியேன்இன்னமுழல்வேனோ?. 10

$ உழலையென்பின்பேய்ச்சிமுலையூடு அவளையுயிருண்டான் *
கழல்களவையேசரணாகக்கொண்ட குருகூர்ச்சடகோபன் *
குழலின்மலியச்சொன்ன ஓராயிரத்துள்இப்பத்தும் *
மழலைதீரவல்லார் காமர்மானேய்நோக்கியர்க்கே. 11

நம்மாழ்வார் திருவடிகளே சரணம்.

திருமலையிலே நாய்ச்சிமாருடனேகூடி நின்றருளின ஸௌசீல்யத்
§ தைக்கண்டு பெரியபிராட்டி முன்னிலையாக அநந்யகதித்வத்தை
விண்ணப்பம்செய்து சரணம்புக்கு தம்முடைய
அத்யவஸாயத்தை அறிவிக்கிறார்.

---

### திருவாய்மொழி-6-ஆம்-பத்து, 10-ஆம்-திருவாய்மொழி

அறுசீராசிரிய விருத்தம்

நாதநாமக்ரியைராகம்-ஆதிதாளம்.

§ உலகமுண்டபெருவாயா! உலப்பில்கீர்த்தியம்மானே! *
நிலவும்சுடர்சூழொளிமூர்த்தி! நெடியாய்! அடியேனுருயிரே! *
திலதமுலகுக்காய்நின்ற திருவேங்கடத்தெம்பெருமானே! *
குலதொலடியேன்உனபாதம் கூடுமாறுகூறாயே. 1
கூறாய்நீராய்நிலனாகிக் கொடுவல்லசுரர்குலமெல்லாம் *
சீறாவெறியும்திருநேமிவலவா! தெய்வக்கோமானே! *
சேறார்சுனைத்தாமரைசெந்தீமலரும் திருவேங்கடத்தானே! *
ஆறாவன்பிலடியேன் உன்னடிசேர்வண்ணம் அருளாயே. 2
வண்ணமருள்கொளணிமேகவண்ணா! மாயவம்மானே! *
எண்ணம்புகுந்துதித்திக்கும்அமுதே! இமையோரதிபதியே! *
தெண்ணலருவிமணிபொன்முத்தலைக்கும் திருவேங்கடத்தானே! *
அண்ணலே! உன்னடிசேர அடியேற்குஆவாவென்னாயே. 3
ஆவாவென்னாதுஉலகத்தையலைக்கும் அசுரர்வாணாள்மேல் *
தீவாய்வாளிமழைபொழிந்தசிலையா! திருமாமகள்கேள்வா!
தேவா! * சுரர்கள்முனிக்கணங்கள்விரும்பும் திருவேங்கடத்தானே! *
பூவார்கழல்கள் அருவினையேன் பொருந்துமாறுபுணராயே. 4
புணராநின்றமரமேழ் அன்றெய்தஒருவில்வலவாவோ! *
புணரேய்நின்றமரமிரண்டின் நடுவேபோனமுதல்வாவோ! *
திணரார்மேகமெனக்களிறுசேரும் திருவேங்கடத்தானே! *
திணரார்சார்ங்கத்துஉன்பாதம் சேர்வது அடியேன்எந்நாளே? 5
எந்நாளேநாம் மண்ணளந்த இணைத்தாமரைகள்காண்பதற்கென்று *
எந்நாளும்நின்றுஇமையோர்கள்ஏத்தி இறைஞ்சிஇனமினமாய் *
மெய்ந்நாமனத்தால்வழிபாடுசெய்யும் திருவேங்கடத்தானே! *
மெய்ந்நானெய்திஎந்நாள் உன்னடிக்கள் அடியேன்மேவுவதே? 6
அடியேன்மேவியமர்கின்றஅமுதே! இமையோரதிபதியே! *
கொடியாவடுபுள்ளுடையானே! கோலக்கனிவாய்ப்பெருமானே! *
செடியார்வினைகள்தீர்மருந்தே! திருவேங்கடத்தெம்பெருமானே! *
நொடியார்பொழுதும்உனபாதம் காணநோலாதாற்றேனே. 7
நோலாதாற்றேன்உனபாதம் காணவென்றுநுண்ணுணர்வின் *
நீலார்கண்டத்தம்மானும் நிறைநான்முகனும்இந்திரனும் *
சேலேய்கண்ணார்பலர்சூழவிரும்பும் திருவேங்கடத்தானே! *
மாலாய்மயக்கிஅடியேன்பால் வந்தாய்போலேவாராயே. 8

வந்தாய்போலேவாராதாய்! வாராதாய்போல்வருவானே! *
செந்தாமரைக்கண்செங்கனிவாய் நாற்றோளமுதே! * எனதுயிரே! *
சிந்தாமணிகள்பகரல்லைப்பகல்செய் திருவேங்கடத்தானே! *
அந்தோ! அடியேன் உனபாதம் அகலகில்லேன் இறையுமே. 9

$ அகலகில்லேனிறையுமென்று அலர்மேல்மங்கையுறைமார்பா! *
நிகரில்புகழாய்! உலகமூன்றுடையாய்! என்னையாள்வானே! *
நிகரிலமரர்முனிக்கணங்கள்விரும்பும் திருவேங்கடத்தானே! *
புகலொன்றில்லாஅடியேன் உன்னடிக்கீழமர்ந்துபுகுந்தேனே. 10

$ அடிக்கீழமர்ந்துபுகுந்து அடியீர்வாழ்மினென்றென்றருள்கொடுக்கும்
படிக்கேழில்லாப்பெருமானைப் பழனக்குருகூர்ச்சடகோபன் * [ம் *
முடிப்பான்சொன்ன ஆயிரத்துத் திருவேங்கடத்துக்கு இவைபத்தும்*
பிடித்தார்பிடித்தார்வீற்றிருந்து பெரியவானுள்நிலாவுவரே. 11

நம்மாழ்வார் திருவடிகளே சரணம்

---

சரணம்புக்கும் தம்மபேக்ஷிதம்பெறாமையாலே ஈச்வரன்
கைவிட்டானாகவெண்ணி, தம்மையும் ஸம்ஸாரியாகச் சங்கித்து
என்னைவிடாதொழியவேண்டுமென்று அவன்
குணங்களைச்சொல்லிக் கூப்பிடுகிறார்.

திருவாய்மொழி-7-ஆம்-பத்து, 2-ஆம்-திருவாய்மொழி

எழுசீராசிரியவிருத்தம்

நீலாம்புரிராகம்-ஆதிதாளம்.

$ கங்குலும் பகலும் கண்டுயி லறியாள்
கண்ணநீர் கைகளா லிறைக்கும் *
சங்குசக் கரங்க ளென்றுகை கூப்பும்
தாமரைக் கண்ணென்றே தளரும் *
எங்ஙனே தரிக்கேன் உன்னைவிட்டு என்னும்
இருநிலம் கைதுழா விருக்கும் *
செங்கயல் பாய்நீர்த் திருவரங் கத்தாய்!
இவள்திறத்து என்செய்கின் றாயே? 1

என்செய் கின்றாய் என்தா மரைக்கண்ணா
வென்னும் கண்ணீர் மல்க இருக்கும் *
என்செய்கேன் எறிநீர்த்திரு வரங்கத்தா
யென்னும்வெவ் வுயிர்த்துயிர்த் துருகும் *
முன்செய்த வினையே முகப்படா யென்னும்
முகில்வண்ணா † தகுவதோ வென்னும் *
முன்செய்து இவ்வுலக முண்டுமிழ்ந் தளந்தாய்!
என்கொலோ முடிகின்றது இவட்கே? 2

---

† 'தகவிதோ' என்றும் பாடாந்தரம்.

வட்கில ளிறையும் மணிவண்ணா வென்னும்
வானமே நோக்கும்மை யாக்கும் *
உட்குடை யசுர ருயிரெல்லா முண்ட
ஒருவனே யென்னும்உள் ளுருகும் *
கட்கிலீ! உன்னைக் காணுமா றருளாய்
காகுத்தா கண்ணனே யென்னும் *
திண்கொடி மதிள்சூழ் திருவரங் கத்தாய்
இவள்திறத்து என்செய்கிட் டாயே? 3

இட்டகால் இட்ட கையளா யிருக்கும்
எழுந்துலாய் மயங்கும் கைகூப்பும் *
கட்டமே காதல் என்றுமூர்ச் சிக்கும்
கடல்வண்ணா! கடியைகா ணென்னும் *
வட்டவாய் நேமி வலங்கையா வென்னும்
வந்திடாய் என்றென்றே மயங்கும் *
சிட்டனே! செழுநீர்த் திருவரங் கத்தாய்!
இவள்திறத்து என்சிந்தித் தாயே? 4

சிந்திக்கும் திசைக்கும் தேறும்கை கூப்பும்
திருவரங்கத் துள்ளா யென்னும்
வந்திக்கும் * ஆங்கே மழைக்கண் நீர்மல்க
வந்திடா யென்றென்றே மயங்கும் *
அந்திப்போ தவுண னுடலிடந் தானே!
அலைகடல் கடைந்த ஆரமுதே! *
சந்தித்துஉன் சரணம் சார்வதே வலித்த
தையலை மையல்செய் தானே! 5

மையல்செய்து என்னை மனம்கவர்ந் தானே
யென்னும் மாமாயனே யென்னும் *
செய்யவாய்மணியே யென்னும் தண் புனல்சூழ்
திருவரங்கத் துள்ளா யென்னும் *
வெய்யவாள் தண்டு சங்கு சக்கரம்
வில்லேந்தும் விண்ணோர் முதலென்னும் *
பைகொள்பாம் பணையாய்! இவள்திறத் தருளாய்
பாவியேன் செயற்பா லதுவே. 6

பாலதுன் பங்க ளின்பங்கள் படைத்தாய்!
பற்றிலார் பற்றநின் றானே! *
காலசக் கரத்தாய்! கடலிடங் கொண்ட
கடல்வண்ணா! கண்ணனே யென்னும் *
சேல்கொள் தண்புனல் சூழ்திரு வரங்கத்தா
யென்னும் என் தீர்த்தனே யென்னும் *
கோலமா மழைக்கண் பனிமல்க இருக்கும்
என்னுடைக் கோமளக் கொழுந்தே. 7

கொழுந்து வானவர்கட் கென்றும் குன்றேந்திக்
கோநிரை காத்தவ னென்னும் *
அழும்தொழும் ஆவிய னலவெவ் வுயிர்க்கும்
அஞ்சன வண்ணனே யென்னும் *
எழுந்துமேல் நோக்கி இமைப்பில ளிருக்கும்
எங்ஙனே நோக்குகே னென்னும் *
செழுந்தடம் புனல்சூழ் திருவரங்கத்தாய்!
என்செய்கேன் என்திரு மகட்கே.

$ என்திரு மகள்சேர் மார்பனே யென்னும் *
என்னுடை யாவியே யென்னும் *
நின்திரு வெயிற்றால் இடந்துநீ கொண்ட
நிலமகள் கேள்வனே யென்னும் *
அன்றுரு வேழும் தழுவிநீ கொண்ட
ஆய்மக ளன்பனே யென்னும் *
தென்திரு வரங்கம் கோயில்கொண் டானே!
தெளிகிலேன் முடிவு இவள் தனக்கே. 9

முடிவு இவள் தனக்கொன் றறிகிலே னென்னும்
மூவுல காளியே யென்னும் *
கடிகமழ் கொன்றைச் சடையனே யென்னும்
நான்முகக் கடவுளே யென்னும் *
வடிவுடை வானோர் தலைவனே யென்னும்
வண்திரு வரங்கனே யென்னும் *
அடியடை யாதாள் போல்இவள் அணுகி
யடைந்தனள் முகில்வண்ண னடியே. 10

$ முகில்வண்ண னடியை யடைந்தருள் சூடி
உய்ந்தவன் மொய்புனல் பொருநல் *
துகில்வண்ணத் தூநீர்ச் சேர்ப்பன் வண்பொழில்சூழ்
வண்குருகூர்ச்சட கோபன் *
முகில்வண்ண னடிமேல் சொன்னசொல் மாலை
ஆயிரத்து இப்பத்தும் வல்லார் *
முகில்வண்ண வானத்து இமையவர் சூழ
இருப்பர்பே ரின்பவெள் ளத்தே. 11

நம்மாழ்வார் திருவடிகளே சரணம்

*பிரணவநமஸ்ஸுக்களில் போதரும் அநந்யார்ஹசேஷத்வத்துக்கு ஸீமாபூமி ததீயசேஷத்வமாகையாலே, அத்ததீயர்க்கு க்ரய விக்ரயார்ஹமான சேஷத்வத்தைப் பிரார்த்திக்கிறார்.*

---

## திருவாய்மொழி-8-ஆம்-பத்து, 10-ஆம்-திருவாய்மொழி

### அறுசீ ராசிரிய விருத்தம்

ஸஹாநா ராகம்-அடதாளம்.

ஸ்ரீ நெடுமாற்கடிமைசெய்வேன்போல் அவனைக்கருதவஞ்சித்து *
தடுமாற்றற்றதீக்கதிகள் முற்றும்தவிர்ந்தசதிர்நினைந்தால் *
கொடுமாவினையேன் அவனடியாரடியே கூடும்இதுவல்லால் *
விடுமாறென்பதென்? அந்தோ! வியன்மூவுலகுபெறினுமே. 1

வியன்மூவுலகுபெறினும்போய்த் தானேதானேயானாலும் *
புயல்மேகம்போல்திருமேனியம்மான் புனைபூங்கழலடிக்கீழ் *
சயமேஅடிமைதலைநின்றார் திருத்தாள்வணங்கி * இம்மையே
பயனேஇன்பம்யான்பெற்றது உறுமோபாவியேனுக்கே. 2

உறுமோபாவியேனுக்கு இவ்வுலகமூன்றும்உடன்நிறைய *
சிறுமாமேனிநிமிர்த்த என்செந்தாமரைக்கண் திருக்குறளன் *
நறுமாவிரைநாள்மலரடிக்கீழ்ப் புகுதலன்றிஅவனடியார் *
சிறுமாமனிசராய்என்னையாண்டார் இங்கேதிரியவே. 3

இங்கேதிரிந்தேற்கிழுக்குற்றென்? இருமாநிலம்முன் னுண்டுமிழ்ந்த
செங்கோலத்தபவளவாய்ச் செந்தாமரைக்கண்என்னம்மான் *
பொங்கேழ்புகழ்கள்வாயவாய்ப்புலன்கொள்வடிவுஎன்மனத்ததாய் *
அங்கேய்மலர்கள்கையவாய் வழிபட்டோடஅருளிலே. 4

வழிபட்டோடஅருள்பெற்று மாயன்கோலமலரடிக்கீழ் *
சுழிபட்டோடும்சுடர்ச்சோதிவெள்ளத்து இன்புற்றிருந்தாலும் *
இழிபட்டோடும்உடலினிற்பிறந்து தன்சீர்யான்கற்று *
மொழிபட்டோடும்கவியமுதநுகர்ச்சி உறுமோமுழுதுமே. 5

நுகர்ச்சியுறுமோ? மூவுலகின் வீடுபேறுதன்கேழில் *
புகர்ச்செம்முகத்தகளிறட்ட பொன்னாழிக்கைஎன்னம்மான் *
நிகர்ச்செம்பங்கிஎரிவிழிகள்நீண்ட அசுரருயிரெல்லாம் *
தகர்த்துண்டுழலும்புட்பாகன் பெரியதனிமாப்புகழே. 6

தனிமாப்புகழேஎஞ்ஞான்றும் நிற்கும்படியாத்தான்தோன்றி *
முனிமாப்பிரமமுதல்வித்தாய் உலகமூன்றும்முளைப்பித்த *
தனிமாத்தெய்வத்தளிரடிக்கீழ்ப் புகுதலன்றிஅவனடியார் *
நனிமாக்கலவியின்பமே நாளும்வாய்க்கநங்கட்கே. 7

நாளும்வாய்க்கநங்கட்கு நளிர்நீர்க்கடலைப்படைத்து * தன்
தாளும்தோளும்முடிகளும் சமனிலாதபலபரப்பி *
நீளும்படர்பூங்கற்பகக்காவும் நிறைபல்நாயிற்றின் *
கோளுமுடையமணிமலைபோல் கிடந்தான் தமர்கள்கூட்டமே. 8

தமர்கள்கூட்டவல்வினையை நாசஞ்செய்யும் ‡ சதுமூர்த்தி *
அமர்கொள்ஆழிசங்குவாள் வில்தண்டு ஆதிபல்படையன் *
குமரன்கோலவைங்கணைவேள் தாதை கோதிலடியார்தம் *
தமர்கள்தமர்கள்தமர்களாம சதிரே வாய்க்கதமியேற்கே. 9

வாய்க்கதமியேற்கு ஊழிதோறூழியூழி * மாகாயாம்
பூக்கொள்மேனிநான்குதோள் பொன்னாழிக்கைஎன்னம்மான் *
நீக்கமில்லாஅடியார்தம் அடியாரடியாரடியார்எம்
கோக்கள் * அவர்க்கேகுடிகளாய்ச்செல்லும் நல்லகோட்பாடே. 10

$ நல்லகோட்பாட்டுலகங்கள் மூன்றினுள்ளும் தான்நிறைந்த *
அல்லிக்கமலக் § கண்ணனை அந்தண்குருகூர்ச்சடகோபன் *
சொல்லப்பட்டஆயிரத்துள் இவையும்பத்தும்வல்லார்கள் *
நல்லபதத்தால்மனைவாழ்வர் கொண்டபெண்டிர்மக்களே. 11

நம்மாழ்வார் திருவடிகளே சரணம்.

---

சரீராவஸாநஸமயத்திலிவன்பக்கல் ஆத்மஸமர்ப்பணம்பண்ணி
ப்ராப்யபூமியிலே போக்காமல் நமக்காக்கிக்கொள்ளுகிறோ
மென்னும் ஈசுவரனை வழித்துணையாகப் பற்றுதல்.

திருவாய்மொழி, 9-ஆம் பத்து, 10-ஆம் திருவாய்மொழி.

கலிவிருத்தம்.

கேதாரகௌளராகம்-ஆதிதாளம்.

$ மாலைநண்ணித் தொழுதெழுமினோவினைகெட *
காலைமாலை கமலமலரிட்டுநீர் *
வேலைமோதுமமதிள்சூழ் திருக்கண்ணபுரத்து *
ஆலின்மேலாலமர்ந்தான் அடியிணைகளே. 1

கள்ளவிழும்மலரிட்டு நீர்இறைஞ்சுமின *
நள்ளிசேரும்வயல்சூழ் கிடங்கின்புடை *
வெள்ளியேய்ந்தமதிள்சூழ் திருக்கண்ணபுரம்
உள்ளி * நாளும்தொழுதெழுமினோ தொண்டரே! 2

தொண்டர்! நுந்தம்துயர்போக நீர்ஏகமாய *
விண்டுவாடாமலரிட்டு நீர்இறைஞ்சுமின் *
வண்டுபாடும்பொழில்சூழ் திருக்கண்ணபுரத்து
அண்டவாணன் * அமரர்பெருமானையே. 3

---

‡ சதிர்மூர்த்தி என்றும் பாடம். § கண்ணனை என்பதும் பாடம்.

மானைநோக்கி மடப்பின்னை தன்கேள்வனை *
தேனைவாடாமலரிட்டு நீர் இறைஞ்சுமின் *
வானையுந்தும‌திள்சூழ் திருக்கண்ணபுரம் *
தான்நயந்தபெருமான் சரணாகுமே!

சரணமாகும் தனதாளடைந்தார்க்கெல்லாம் *
மரணமானால் வைகுந்தம்கொடுக்கும்பிரான் *
அரணமைந்தமதிள்சூழ் திருக்கண்ணபுரத்
தரணியாளன் * தனதன்பர்க்கு அன்பாகுமே. 5

அன்பனாகும் தனதாளடைந்தார்க்கெல்லாம் *
செம்பொனாகத்து அவுணனுடல்கீண்டவன் *
நன்பொனேய்ந்தமதிள்சூழ் திருக்கண்ணபுரத்து
அன்பன் * நாளும் தனமெய்யர்க்குமெய்யனே.

மெய்யனாகும் விரும்பித்தொழுவார்க்கெல்லாம் *
பொய்யனாகும் புறமேதொழுவார்க்கெல்லாம் *
செய்யில்வாளையுகளும் திருக்கண்ணபுரத்து
ஐயன் * ஆகத்தணைப்பார்கட்குஅணியனே. 7

அணியனாகும் தனதாளடைந்தார்க்கெல்லாம் *
பிணியும்சாரா பிறவிகெடுத்தாளும் *
மணிபொனேய்ந்தமதிள்சூழ் திருக்கண்ணபுரம்
பணிமின் * நாளும் பரமேட்டிதன்பாதமே. 8

பாதம்நாளும்பணியத் தணியும்பிணி *
ஏதம்சாரா எனக்கேல்இனிஎன்குறை ? *
வேதநாவர்விரும்பும் திருக்கண்ணபுரத்து
ஆதியானை * அடைந்தார்க்கு அல்லலில்லையே. 9

இல்லையல்லல்எனக்கேல் இனிஎன்குறை ? *
அல்லிமாதரமரும் திருமார்பினன் *
கல்லிலேய்ந்தமதிள்சூழ் திருக்கண்ணபுரம்
சொல்ல * நாளும் துயர்பாடுசாராவே. 10

$ பாடுசாராவினை பற்றறவேண்டுவீர் ! *
மாடநீடு குருகூர்ச்சடகோபன் * சொல்
பாடலானதமிழ் ஆயிரத்துள்இப்பத்தும்
பாடியாடி பணிமின் அவன்தாள்களே. 11

நம்மாழ்வார் திருவடிகளே சரணம்.

ஈசுவரன், ஆழ்வாருக்கு அர்ச்சிராதிமார்க்கத்தையும், ஆதிவாஹிகத் ஸத்காரங்களையும் பரமபதத்தையும், தானும் நித்தியஸூரி களும் பிராட்டிமாரும் எதிரே வந்து ஆதரிக்கும்படியை யும், நித்தியஸூரி ஸேவிதராய் பிராட்டியோடு வீற் றிருக்கும்படியைக்காண்டு, தான் ஆனந்த நிர்ப் பரனாயிருக்கிறபடியையும் காட்ட அதைக் கண்டு ஆழ்வார் ப்ரீதராதல்.

## திருவாய்மொழி, 10-ஆம் பத்து, 9-ஆம் திருவாய்மொழி

கலிவிருத்தம்.

கல்யாணிராகம்-அடதாளம்.

§ சூழ்விசும்பணிமுகில் தூரியம்முழக்கின *
ஆழ்கடலலைதிரை கையெடுத்தாடின *
ஏழ்பொழிலும் வளமேந்தியஎன்னப்பன் *
வாழ்புகழ்நாரணன் தமரைக் கண்டுகந்தே. 1

நாரணன்தமரைக்கண்டுகந்து நல்நீர்முகில் *
பூரணபொற்குடம் பூரித்ததுஉயர்விண்ணில் *
நீரணிகடல்கள் நின்றார்த்தன * நெடுவரைத்
தோரணம்நிரைத்து எங்கும்தொழுதனருலகே. 2

தொழுதனர்உலகர்கள் தூபம்நல்மலர்மழை *
பொழிவனர் * பூமியன்றளந்தவன்தமர்முன்னே *
எழுமினென்று இருமருங்குஇசைத்தனர் முனிவர்கள் *
வழியிதுவைகுந்தற்கென்று வந்தெதிரே. 3

எதிரெதிர் இமையவர் இருப்பிடம்வகுத்தனர் *
கதிரவரவரவர் கைந்நிரைகாட்டினர் *
அதிர்குரல்முரசங்கள் அலைகடல்முழக்கொத்த *
மதுவிரிதுழாய்முடி மாதவன்தமர்க்கே. 4

மாதவன்தமரென்று வாசலில்வானவர் *
போதுமின்எமதிடம் புகுதுகவென்றலும் *
கீதங்கள்பாடினர் கின்னரர்கெருடர்கள் *
வேதநல்வாயவர் வேள்வியுள்மடுத்தே. 5

வேள்வியுள்மடுத்தலும் விரைகமழ்நறும்புகை *
காளங்கள்வலம்புரிகலந்து எங்கும்இசைத்தனர் *
ஆண்மின்கள்வானகம் ஆழியானதமரென்று *
வாளொண்கண்மடந்தையர் வாழ்த்தினர்மகிழ்ந்தே. 6

மடந்தையர்வாழ்த்தலும் மருதரும்வசுக்களும் *
தொடர்ந்தெங்கும் தோத்திரம்சொல்லினர் * தொடுகடல்
கிடந்தஎங்கேசவன் கிளரொளிமணிமுடி *
குடந்தைஎங்கோவலன் குடியடியார்க்கே. 7
குடியடியார்இவர் கோவிந்தன் தனக்கென்று *
முடியுடைவானவர் முறைமுறைஎதிர்கொள்ள *
கொடியணிநெடுமதிள் கோபுரம்குறுகினர் *
வடிவுடைமாதவன் வைகுந்தம்புகவே. 8
வைகுந்தம்புகுதலும் வாசலில்வானவர் *
வைகுந்தன்தமர்எமர் எமதிடம்புகுதென்று *
வைகுந்தத்தமரரும் முனிவரும்வியந்தனர் *
வைகுந்தம்புகுவது மண்ணவர்விதியே. 9
விதிவகைபுகுந்தனர்என்று நல்வேதியர் *
பதியினில்பாங்கினில் பாதங்கள்கழுவினர் *
நிதியும்நற்சுண்ணமும் நிறைகுடவிளக்கமும் *
மதிமுகமடந்தையர் ஏந்தினர்வந்தே. 10
$ வந்தவர்எதிர்கொள்ள மாமணிமண்டபத்து *
அந்தமில்பேரின்பத்து அடியரோடிருந்தமை *
கொந்தலர்பொழில் குருகூர்ச்சடகோபன் * சொல்
சந்தங்களாயிரத்து இவைவல்லார்முனிவரே.

நம்மாழ்வார் திருவடிகளே சரணம்.

---

ஈசுவரன் பெரிய திருவடிமேல் ஏறாநின்று ப்ரக்ருதி ஸம்பந்தத்தை யொழித்து நித்தியஸூரிகளின் ஸங்கத்தில் புகுந்து வீடாய்தீர்ந்து இவர்க்கு மவ்வருகான தன்வீடாய்தீரும்படி ஸம்ச்லேஷித்தருளுதல்.

---

திருவாய்மொழி, 10-ஆம் பத்து, 10-ஆம் திருவாய்மொழி

அறுசீராசிரிய விருத்தம்.

கல்யாணிராகம்-அடதாளம்.

$ முனியே! நான்முகனே! முக்கண்ணப்பா! * என்பொல்லாக்
கனிவாய்த் தாமரைக்கண்கருமாணிக்கமே! என்கள்வா! *
தனியேனாருயிரே! என்தலைமிசையாய்வந்திட்டு *
இனிநான்போகலொட்டேன் ஒன்றும்மாயம்செய்யேல்என்னையே. 1
மாயம்செய்யேல்என்னை உன் திருமார்வத்துமாலைநங்கை *
வாசம்செய்பூங்குழலாள் திருவாணைநின்னாணைகண்டாய் *
நேசம்செய்துஉன்னோடுஎன்னை உயிர்வேறின்றிஒன்றாகவே *
கூசம்செய்யாதுகொண்டாய் என்னைக்கூவிக்கொள்ளாய்வந்தந்தோ! 2
கூவிக்கொள்ளாய்வந்தந்தோ! என்பொல்லாக்கருமாணிக்கமே! *
ஆவிக்கோர்பற்றுக்கொம்பு நின்னலால்அறிகின்றிலேன்நான் *

மேவித்தொழும்பிரமன்சிவன் இந்திரனாதிக்கெல்லாம் *
நாவிக்கமலமுதற்கிழங்கே! உம்பரந்ததுவே. 3

உம்பரந்தண்பாழேயோ! அதனுள்மிசைநீயேயோ! *
அம்பரநற்சோதிஅதனுள் பிரமன் அரன்நீ *
உம்பரும்யாதவரும்படைத்த முனிவனவன்நீ *
எம்பரம்சாதிக்கலுற்று என்னைப்போரவிட்டிட்டாயே. 4

போரவிட்டிட்டுஎன்னை நீபுறம்போக்கலுற்றால் * பின்னையான்
ஆரைக்கொண்டுஎத்தையந்தோ எனதென்பதென்?யானென்பதென்? *
தீரஇரும்புண்டநீரதுபோல என்னாருயிரை *
ஆரப்பருக * எனக்கு ஆராவமுதானாயே. 5

எனக்காராவமுதாய் எனதாவியைஇன்னுயிரை *
மனக்காராமைமன்னியுண்டிட்டாய் இனியுண்டொழியாய் *
புனக்காயாநிறத்த புண்டரீகக்கண்செங்கனிவாய் *
உனக்கேற்கும்கோலமலர்ப்பாவைக்கன்பா! என்னன்பேயோ! * 6

$ கோலமலர்ப்பாவைக்கன்பாகிய என்னன்பேயோ! *
நீலவரைஇரண்டுபிறைகவ்வி நிமிர்ந்ததொப்ப *
கோலவராகமொன்றாய் நிலம்கோட்டிடைக்கொண்டஎந்தாய்! *
நீலக்கடல்கடைந்தாய்! உன்னைப்பெற்றுஇனிப்போக்குவனோ? 7

பெற்றினிப்போக்குவனோ? உன்னைஎன்தனிப்பேருயிரை *
உற்றஇருவினையாய் உயிராய்ப்பயனாய்அவையாய் *
முற்றஇம்மூவுலகும் பெருந்தூறாய்த்தூற்றில்புக்கு *
முற்றக்கரந்தொளித்தாய்! என்முதல்தனிவித்தேயோ! 8

முதல்தனிவித்தேயோ! முழுமூவுலகாதிக்கெல்லாம் *
முதல்தனிஉன்னைஉன்னை எனைநாள்வந்துகூடுவன்நான்? *
முதல்தனிஅங்கும்இங்கும் முழுமுற்றுறுவாழ்பாழாய் *
முதல்தனிசூழ்ந்தகன்றாழ்ந்துயர்ந்தமுடிவிலீயோ! 9

$ சூழ்ந்தகன்றாழ்ந்துயர்ந்த முடிவில்பெரும்பாழேயோ!
சூழ்ந்ததனில்பெரிய பரநன்மலர்ச்சோதீயோ! *
சூழ்ந்ததனில்பெரிய சுடர்ஞானவின்பமேயோ! *
சூழ்ந்ததனில்பெரிய என்னவாவறச்சூழ்ந்தாயே. 10

$ அவாவறச்சூழ் அரியை அயனை அரனைஅலற்றி *
அவாவற்றுவீடுபெற்ற குருகூர்ச்சடகோபன்சொன்ன *
அவாவிலந்தாதிகளால் இவையாயிரமும் * முடிந்த
அவாவிலந்தாதிஇப்பத்துஅறிந்தார் பிறந்தார்உயர்ந்தே. 11

நம்மாழ்வார் திருவடிகளே சரணம்.

கோயில் திருவாய்மொழி ஸம்பூர்ணம்

திருவாய்மொழி யநுசந்திக்கு மக்ரமம் ஸேவாஸந்நிதிபோலே
பத்தாயிருக்கும் கண்ணிநுண் சிறுத்தாம் பநுசந்தித்தவநந்
தரம் குருஸாவித்ரியைப் போலே நூற்றெட்டா
யிருக்கும் நூற்றந்தாதி யநுஸந்திக்கல்

திருவரங்கத்தமுதனார் அருளிச்செய்த
ப்ரபந்நகாயத்ரி என்னும்

# இராமாநுச நூற்றந்தாதி

(வேதப்பிரான்பட்டர் அருளிச்செய்தவை)

ஒரு விகற்ப நேரிசை வெண்பா

முன்னைவினையகல மூங்கிற்குடியமுதன் *
பொன்னங்கழற்கமலப் போதிரண்டும் *—என்னுடைய
சென்னிக்கு அணியாகச் சேர்த்தினேன் * தென்புலத்தார்க்கு
என்னுக்கடவுடையேன் யான்.

கட்டளைக் கலித்துறை

நயந்தருபேரின்பமெல்லாம் பழுதின்றிநண்ணினர்பால் *
சயந்தருகீர்த்தி இராமாநுசமுனி தாளிணைமேல் *
உயர்ந்தகுணத்துத் திருவரங்கத்தமுதோங்கும் * அன்பால்
இயம்புங்கலித்துறையந்தாதிஓத இசைநெஞ்சமே!
இனியென்குறைநமக்கு? எம்பெருமானார் திருநாமத்தால் *
முனிதந்த "நூற்றெட்டுச் சாவித்திரி" யென்னுநுண்பொருளை *
கனிதந்தசெஞ்சொற் கலித்துறை யந்தாதிபாடித்தந்தான் *
புனிதன் திருவரங்கத்தமுதாகியபுண்ணியனே.

அமுதனாருளிச்செய்ததால், அவரபிப்ராயத்தாலே

(அபிநிவேசமுடைய ஆஸ்திகர் அருளிச்செய்தது)

சொல்லின்தொகைகொண்டு உனதடிப்போதுக்குத்தொண்டுசெய்யும்
நல்லன்பரேத்தும்உன்நாமமெல்லாம் என்றன்நாவினுள்ளே *
அல்லும்பகலும் அமரும்படிநல்கு அறுசமயம்
வெல்லும்பரம! * இராமாநுச! இதுஎன்விண்ணப்பமே.

---

பைரவிராகம்-ரூபகதாளம்.

§ பூமன்னுமாது பொருந்தியமார்பன் * புகழ்மலிந்த
பாமன்னுமாறன் அடிபணிந்துய்ந்தவன் * பல்கலையோர்
தாம்மன்னவந்தஇராமாநுசன் சரணாரவிந்தம்
நாம்மன்னிவாழ * நெஞ்சே! சொல்லுவோம்அவன்நாமங்களே.

தோடி ராகம்-ரூபகதாளம்.

§ கள்ளார்பொழில் தென்னரங்கன் * கமலப்பதங்கள்நெஞ்சில்
கொள்ளா மனிசரைநீங்கி * குறையல்பிரானடிக்கீழ்
விள்ளாதஅன்பன் இராமாநுசன் மிக்கசீலமல்லால்
உள்ளாதுஎன்னெஞ்சு * ஒன்றறியேன் எனக்குற்றபேரியல்வே. 2

பேரியல்நெஞ்சே! அடிபணிந்தேன்உன்னை * பேய்ப்பிறவிப்
பூரியரோடுஉள்ள சுற்றம்புலற்றி * பொருவருஞ்சீர்
ஆரியன்செம்மைஇராமாநுசமுனிக்குஅன்புசெய்யும்
சீரியபேறுடையார் * அடிக்கீழ்என்னைச்சேர்த்ததற்கே. 3

என்னைப்புவியில் ஒருபொருளாக்கி * மருள்சுரந்த
முன்னைப்பழவினை வேரறுத்து * ஊழிமுதல்வனையே
பன்னப்பணித்தஇராமாநுசன் பரன்பாதமும்என்
சென்னித்தரிக்கவைத்தான் * எனக்குஏதும்சிதைவில்லையே. 4

எனக்குற்றசெல்வம் இராமாநுசனென்று * இசையகில்லா
மனக்குற்றமாந்தர் பழிக்கில்புகழ் * அவன்மன்னியசீர்
தனக்குற்றஅன்பர் அவன்திருநாமங்கள்சாற்றும்என்பா
இனக்குற்றம்காண்கில்லார் * பத்தியேய்ந்தஇயல்விதென்றே. 5

இயலும்பொருளும் இசையத்தொடுத்து * ஈன்கவிகள்அன்பால்
மயல்கொண்டுவாழ்த்தும்இராமாநுசனை * மதியின்மையால்
பயிலும்கவிகளில்பத்தியில்லாத என்பாவிநெஞ்சால்
முயல்கின்றனன் * அவன்தன்பெருங்கீர்த்தி மொழிந்திடவே. 6

பியாகடை ராகம்-ரூபக தாளம்.

§ மொழியைக்கடக்கும்பெரும்புகழான் * வஞ்சமுக்குறும்பாம்
குழியைக்கடக்கும்நம்கூரத்தாழ்வான் சரண்கூடியபின் *
பழியைக்கடத்தும்இராமாநுசன் புகழ்பாடிஅல்லா
வழியைக்கடத்தல் * எனக்குஇனியாதும் வருத்தமன்றே. 7

வருத்தும் புறவிருள்மாற்ற * எம்பொய்கைப்பிரான்மறையின்
குருத்தின்பொருளையும் செந்தமிழ்தன்னையும்கூட்டி * ஒன்றத்
திரித்துஅன்றுஎரித்ததிருவிளக்கைத் தன்திருவுள்ளத்தே
இருத்தும்பரமன் * இராமாநுசன் எம்இறையவனே. 8

இறைவனைக்காணும் இதயத்திருள்கெட * ஞானமென்னும்
நிறைவிளக்கேற்றிய பூதத்திருவடிதாள்கள் * நெஞ்சத்து
உறையவைத்தாளும்இராமாநுசன் புகழோதும்நல்லோர்
மறையினைக்காத்து * இந்தமண்ணகத்தே மன்னவைப்பவரே. 9

மன்னியபேரிருள்மாண்டபின் * கோவலுள்மாமலராள்
தன்னொடுமாயனைக் கண்டமைகாட்டும் * தமிழ்த்தலைவன்
பொன்னடிபோற்றும்இராமாநுசற்கு அன்புபூண்டவர்தாள்
சென்னியில்சூடும் * திருவுடையார் என்றும்சீரியரே. 10

கல்யாணிராகம்-ரூபகதாளம்.

சீரியநான்மறைச் செம்பொருள் * செந்தமிழாலளித்த
பாரியலும்புகழ்ப் பாண்பெருமான் * சரணாம்பதுமத்
தாரியல்சென்னிஇராமாநுசன் தன்னைச்சார்ந்தவர்தம்
காரியவண்மை * என்னால்சொல்லொணாது இக்கடலிடத்தே. 11

இடங்கொண்டகீர்த்தி மழிசைக்கிறைவன் * இணையடிப்போது
அடங்குமிதயத்து இராமாநுசன் * அம்பொற்பாதமென்றும்
கடங்கொண்டிறைஞ்சும் திருமுனிவர்க்கன்றிக் காதல்செய்யாத்
திடங்கொண்டஞானியர்க்கே * அடியேன் அன்புசெய்வதுவே. 12

செய்யும் பசுந்துளவத்தொழில்மாலையும் * செந்தமிழில்
பெய்யும் மறைத்தமிழ்மாலையும் * பேராதசீரரங்கத்து
அய்யன் கழற்கணியும்பரன்தாளன்றி ஆதரியா
மெய்யன் * இராமாநுசன் சரணேகதிவேறெனக்கே. 13

கதிக்குப்பதறி * வெங்கானமும் கல்லும்கடலுமெல்லாம்
கொதிக்கத்தவம்செய்யும்கொள்கையற்றேன் * கொல்லிகாவலன்சொல்
பதிக்கும்கலைக்கவிபாடும்பெரியவர் பாதங்களே
துதிக்கும்பரமன் * இராமாநுசன் என்னைச்சோர்விலனே. 14

சோராதகாதல் பெருஞ்சுழிப்பால் * தொல்லைமாலை ஒன்றும்
பாராது அவனைப் பல்லாண்டென்றுகாப்பிடும் * பான்மையன்தாள்
பேராதஉள்ளத்துஇராமாநுசன்தன் பிறங்கியசீர்
சாராமனிசரைச்சேரேன் * எனக்குஎன்னதாழ்வினியே? 15

நாதநாமக்கிரியைராகம்-ஆதிதாளம்.

$ தாழ்வொன்றில்லாமறைதாழ்ந்து * தலமுழுதும்கலியே
ஆள்கின்றநாள்வந்து அளித்தவன்காண்மின் * அரங்கர்மௌலி
சூழ்கின்றமாலையைச் சூடிக்கொடுத்தவள்தொல்லருளால்
வாழ்கின்றவள்ளல் * இராமாநுசன்என்னும் மாமுனியே. 16

முனியார் துயரங்கள்முந்திலும் * இன்பங்கள்மொய்த்திடினும்
கனியார்மனம் கண்ணமங்கைநின்றானை * கலைபரவும்
தனியானையைத்தண்தமிழ்செய்த நீலன்தனக்குஉலகில்
இனியானை * எங்களிராமாநுசனை வந்தெய்தினரே. 17

எய்தற்கரியமறைகளை * ஆயிரம்இன்தமிழால்
செய்தற்குஉலகில்வரும் சடகோபனை * சிந்தையுள்ளே
பெய்தற்கிசையும் பெரியவர்சீரை உயிர்களெல்லாம்
உய்தற்குதவும் இராமாநுசன் எம்உறுதுணையே. 18

உறுபெருஞ்செல்வமும் தந்தையும்தாயும் * உயர்குருவும்
வெறிதருபூமகள்நாதனும் * மாறன்விளங்கியசீர்
நெறிதரும்செந்தமிழாரணமேயென்று இந்நீணிலத்தோர்
அறிதரநின்ற * இராமாநுசன் எனக்கு ஆரமுதே. 19

ஆரப்பொழில் தென்குருகைப்பிரான் * அமுதத்திருவாய்
ஈரத்தமிழின் இசையுணர்ந்தோர்கட்கு * இனியவர்தம்
சீரைப்பயின்றுய்யும் சீலங்கொள்நாதமுனியை நெஞ்சால்
வாரிப்பருகும் * இராமாநுசன் எந்தன்மாநிதியே. 20

நிதியைப்பொழியும்முகிலென்று * நீசர்தம்வாசல்பற்றித்
துதிகற்றுஉலகில் துவள்கின்றிலேன் இனி * தூய்நெறிசேர்
எதிகட்கிறைவன் யமுனைத்துறைவன் இணையடியாம்
கதிபெற்றுடைய * இராமாநுசன் என்னைக்காத்தனனே. 21

கார்த்திகையானும் கரிமுகத்தானும் * கனலும்முக்கண்
மூர்த்தியும்மோடியும்வெப்பும்முதுகிட்டு * மூவுலகும்
பூத்தவனேயென்றுபோற்றிட வாணன்பிழைபொறுத்த
தீர்த்தனைஏத்தும் * இராமாநுசன் என்தன்சேமவைப்பே. 22

வைப்பாயவான்பொருளென்று * நல்லன்பர்மனத்தகத்தே
எப்போதும்வைக்கும் இராமாநுசனை * இருநிலத்தில்
ஒப்பாரிலாதஉறுவினையேன் வஞ்சநெஞ்சில்வைத்து
முப்போதும்வாழ்த்துவன் * என்னாம்இது அவன்மொய்புகழ்க்கே?

மொய்த்தவெந்தீவினையால் பல்லுடல்தொறும்மூத்து * அதனால்
எய்த்தொழிந்தேன் முனநாள்களெல்லாம் * இன்றுகண்டுயர்ந்தேன்
பொய்த்தவம்போற்றும் புலைச்சமயங்கள்நிலத்தவியக்
கைத்தமெய்ஞ்ஞானத்து * இராமாநுசனென்னும் கார்தன்னையே. 24

காரேய்கருணை இராமாநுச ! * இக்கடலிடத்தில்
ஆரேயறிபவர் நின்னருளின்தன்மை? * அல்லலுக்கு
நேரேஉறைவிடம் நான்வந்துநீ என்னையுய்த்தபின் உன்
சீரேஉயிர்க்குயிராய் * அடியேற்குஇன்று தித்திக்குமே. 25

திக்குற்றகீர்த்தி இராமாநுசனை * என்செய்வினையாம்
மெய்க்குற்றம்நீக்கி விளங்கியமேகத்தை * மேவும்நல்லோர்
எக்குற்றவாளர் எதுபிறப்பு ஏதியல்வாகநின்றோர்
அக்குற்றம்அப்பிறப்பு * அவ்வியல்வே நம்மைஆட்கொள்ளுமே. 26

கொள்ளக்குறைவற்றிலங்கி * கொழுந்துவிட்டோங்கியஉன்
வள்ளல்தனத்தினால் வல்வினையேன்மனம்நீபுகுந்தாய் *
வெள்ளைச்சுடர்விடும் உன்பெருமேன்மைக்கு இழுக்கிதென்று
தள்ளுற்றிரங்கும் * இராமாநுச ! என்தனிநெஞ்சமே. 27

நெஞ்சில்கறைகொண்டகஞ்சனைக் காய்ந்தநிமலன் * எங்கள்
பஞ்சித்திருவடிப் பின்னைதன்காதலன் * பாதம்நண்ணா
வஞ்சர்க்கரிய இராமாநுசன் புகழன்றிஎன்வாய்
கொஞ்சிப்பரவகில்லாது * என்னவாழ்வு இன்றுகூடியதே ! 28

கூட்டும்விதி என்றுகூடுங்கொலோ? * தென்குருகைப்பிரான்
பாட்டென்னும் வேதப் பசுந்தமிழ்தன்னை * தன்பத்தியென்னும்
வீட்டின்கண்வைத்த இராமானுசன் புகழ்மெய்யுணர்ந்தோர்
ஈட்டங்கள்தன்னை * என்நாட்டங்கள் கண்டு இன்பமெய்திடவே. 29

இன்பம்தரு பெருவீடுவந்தெய்திலென் ? * எண்ணிறந்த
துன்பம்தரு நிரயம்பலசூழிலென் ? * தொல்லுலகில்
மன்பல்லுயிர்கட்கிறையவன் மாயனெனமொழிந்த
அன்பன் அனகன் * இராமானுசன் என்னையாண்டனனே. 30

$ ஆண்டுகள்நாள் திங்களாய் * நிகழ்காலமெல்லாம்மனமே!
ஈண்டு பல்யோனிகள்தோறுழல்வோம் * இன்றுஓரெண்ணின்றியே
காண்தகுதோளண்ணல் தென்னத்தியூரர்கழலிணைக்கீழ்ப்
பூண்டஅன்பாளன் * இராமானுசனைப் பொருந்தினமே. 31

பொருந்தியதேசும் பொறையும்திறலும்புகழும் * நல்ல
திருந்தியஞானமும் செல்வமும்சேரும் * செறுகலியால்
வருந்தியஞாலத்தை வண்மையினால்வந்தெடுத்தளித்த
அருந்தவன் * எங்களிராமானுசனை அடைபவர்க்கே. 32

அடையார்கமலத்துஅலர்மகள்கேள்வன் * கையாழியென்னும்
படையொடுநாந்தகமும் படர்தண்டும் ஒண்சார்ங்கவில்லும் *
புடையார்புரிசங்கமும் இந்தப்பூதலம் காப்பதற்கென்று *
இடையே இராமானுசமுனியாயின இந்நிலத்தே. 33

நிலத்தைச்செறுத்துண்ணும் நீசக்கலியை * நினைப்பரிய
பலத்தைச்செறுத்தும் பிறங்கியதில்லை * என்பெய்வினைதென்
புலத்தில்பொறித்த அப்புத்தகச்சும்மைபொறுக்கியபின்
நலத்தைப்பொறுத்தது * இராமானுசன்தன் நயப்புகழே. 34

நயவேன்ஒருதெய்வம் நானிலத்தே * சிலமானிடத்தைப்
புயலேயெனக் கவிபோற்றிசெய்யேன் * பொன்னரங்கமென்னில்
மயலேபெருகும்இராமானுசன் மன்னுமாமலர்த்தாள்
அயரேன் * அருவினை என்னைஎவ்வாறு இன்றுஅடர்ப்பதுவே? 35

அடல்கொண்டநேமியன் ஆருயிர்நாதன் * அன்றுஆரணச்சொல்
சடல்கொண்டஒண்பொருள் கண்டளிப்ப * பின்னும்காசினியோர்
இடரின்கண்வீழ்ந்திடத் தானும்அவ்வொண்பொருள் கொண்டுஅவர்பின்
படரும்குணன் * எம்இராமானுசன்தன் படியிதுவே. 36

படிகொண்டகீர்த்தி இராமாயணமென்னும் பத்திவெள்ளம்
குடிகொண்டகோயி லிராமானுசன்குணங்கூறும் * அன்பர்
கடிகொண்டமாமலர்த்தாள் கலந்துஉள்ளம்கனியும்நல்லோர்
அடிகண்டுகொண்டுகந்து * என்னையும் ஆளவர்க்குஆக்கினரே. 37

ஆக்கி அடிமை நிலைப்பித்தனை என்னை இன்று * அவமே
போக்கிப் புறத்திட்டதென் பொருளா முன்பு? * புண்ணியர்தம்
வாக்கிற்பிரியா இராமாநுச ! நின்னருளின்வண்ணம்
நோக்கில்தெரிவரிதால் * உரையாய் இந்தநுண்பொருளே. 38

பொருளும்புதல்வரும்பூமியும் * பூங்குழலாரும்என்றே
மருள்கொண்டுஇளைக்கும் நமக்குநெஞ்சே! மற்றுளார் தரமோ?
இருள்கொண்டவெந்துயர்மாற்றித் தன்னீறில்பெரும்புகழே
தெருளும்தெருள்தந்து * இராமாநுசன்செய்யும் சேமங்களே. 39

சேமநல்வீடும் பொருளும்தருமமும் * சீரியநற்
காமமும் என்றிவைநான்கென்பர் * நான்கினும்கண்ணனுக்கே
ஆமதுகாமம் அறம்பொருள்வீடிதற்கென்றுரைத்தான்
வாமனன்சீலன் * இராமாநுசன் இந்தமண்மிசையே. 40

மண்மிசையோனிகள்தோறும்பிறந்து * எங்கள்மாதவனே
கண்ணுறநிற்கிலும் காணகில்லா * உலகோர்களெல்லாம்
அண்ணல்இராமாநுசன் வந்துதோன்றிய அப்பொழுதே
நண்ணருஞானம் தலைக்கொண்டு * நாரணற்காயினரே. 41

ஆயிழையார் கொங்கைதங்கும் * அக்காதலளற்றழுந்தி
மாயும்என்னாவியை வந்தெடுத்தான்இன்று * மாமலராள்
நாயகன் எல்லாவுயிர்கட்கும்நாதன் அரங்கனென்னும்
தூயவன் * தீதிலிராமாநுசன் தொல்லருள்சுரந்தே. 42

சுரக்கும்திருவும்உணர்வும் * சொலப்புகில்வாயமுதம்
பரக்கும் இருவினைபற்றறவோடும் * படியிலுள்ளீர்!
உரைக்கின்றனன்உமக்கு யான்அறஞ்சீறும்உறுகலியைத்
துரக்கும்பெருமை * இராமாநுசனென்று சொல்லுமினே. 43

சொல்லார் தமிழ்ஒருமூன்றும் * சுருதிகள்நான்கும் எல்லை
யில்லாஅறநெறியாவும் தெரிந்தவன் * எண்ணருஞ்சீர்
நல்லார்பரவும்இராமாநுசன் திருநாமம்நம்பிக்
கல்லார் அகலிடத்தோர் * எதுபேறென்றுகாமிப்பரே. 44

பேறொன்றுமற்றில்லை நின்சரணன்றி * அப்பேறளித்தற்கு
ஆறொன்றுமில்லை மற்றச்சரணன்றி * என்றுஇப்பொருளைத்
தேறுமவர்க்கும்எனக்கும் உனைத்தந்தசெம்மை சொல்லால்
கூறும்பரமன்று * இராமாநுசா ! மெய்ம்மைகூறிடிலே. 45

கூறும்சமயங்களாறும்குலைய * குவலயத்தே
மாறன்பணித்த மறையுணர்ந்தோனை * மதியிலியேன்
தேறும்படி என்மனம்புகுந்தானைத் திசையனைத்தும்
ஏறும்குணனை * இராமாநுசனை இறைஞ்சினமே. 46

இறைஞ்சப்படும்பரன் ஈசன் அரங்கனென்று * இவ்வுலகத்து
அறம்செப்பும் அண்ணல்இராமாநுசன் * என்னருவினையின்
திறம்செற்றுஇரவும்பகலும்விடாது என்தன்சிந்தையுள்ளே
நிறைந்துஒப்பறஇருந்தான் * எனக்குஆரும்நிகரில்லையே. 47

நிகரின்றிநின்ற என்நீசதைக்கு * நின்னருளின்கணன்றிப்
புகலொன்றுமில்லை அருட்குமஃதேபுகல் * புன்மையிலோர்
பகரும்பெருமைஇராமாநுச! இனிநாம்பழுதே
அகலும்பொருளென்? * பயனிருவோமுக்குமானபின்னே. 48

ஆனதுசெம்மைஅறநெறி * பொய்ம்மைஅறுசமயம்
போனதுபொன்றிஇறந்ததுவெங்கலி * பூங்கமலத்
தேனதிபாய்வயல் தென்னரங்கன்கழல்சென்னிவைத்துத்
தானதில்மன்னும் * இராமாநுசன் இத்தலத்துதித்தே. 49

உதிப்பன உத்தமர்சிந்தையுள் * ஒன்னலர்நெஞ்சம்அஞ்சிக்
கொதித்திட மாறிநடப்பன * கொள்ளைவன்குற்றமெல்லாம்
பதித்தஎன்புன்கவிப்பாவினம்பூண்டன பாவுதொல்சீர்
எதித்தலைநாதன் * இராமாநுசன்தன் இணையடியே. 50

அடியைத்தொடர்ந்தெழும் ஐவர்கட்காய் * அன்றுபாரதப்போர்
முடியப் பரிநெடுந்தேர்விடும்கோனை * முழுதுணர்ந்த
அடியர்க்கமுதம்இராமாநுசன் என்னையாளவந்துஇப்
படியில்பிறந்தது * மற்றில்லைகாரணம் பார்த்திடிலே. 51

பார்த்தான் அறுசமயங்கள்பதைப்ப * இப்பார்முழுதும்
போர்த்தான்புகழ்கொண்டு புன்மையினேனிடைத்தானபுகுந்து *
தீர்த்தான்இருவினைதீர்த்து அரங்கன்செய்யதாளிணையோடு
ஆர்த்தான் * இவைஎம்இராமாநுசன் செய்யும் அற்புதமே. 52

அற்புதன் செம்மைஇராமாநுசன் * என்னையாளவந்த
கற்பகம் கற்றவர்காமுறுசீலன் * கருதரிய
பற்பலுயிர்களும்பல்லுலகுயாவும் பரனதென்னும்
நற்பொருள்தன்னை * இந்நானிலத்தேவந்துநாட்டினனே. 53

நாட்டிய நீசச்சமயங்கள்மாண்டன * நாரணனைக்
காட்டியவேதம் களிப்புற்றது * தென்குருகைவள்ளல்
வாட்டமிலாவண்தமிழ்மறைவாழ்ந்தது மண்ணுலகில்
ஈட்டியசீலத்து * இராமாநுசன்தன் இயல்வுகண்டே. 54

கண்டவர்சிந்தைகவரும் * கடிபொழில்தென்னரங்கன்
தொண்டர்குலாவும் இராமாநுசனை * தொகையிறந்த
பண்தருவேதங்கள் பார்மேல்நிலவிடப்பார்த்தருளும்
கொண்டலைமேவித்தொழும் * குடியாம்எங்கள் † கோக்குடியே. 55

† கோக்குலமே என்றும் பாடம்.

கோக்குலமன்னரை மூவெழுகால் * ஒருகூர்மழுவால்
போக்கியதேவனைப் போற்றும்புனிதன் * புவனமெங்கும்
ஆக்கியகீர்த்தி இராமாநுசனை அடைந்தபின்என்
வாக்குஉரையாது * என்மனம்நினையாது இனிமற்றொன்றையே. 56

மற்றொருபேறு மதியாது * அரங்கன்மலரடிக்குஆ
ளுற்றவரே தனக்கு உற்றவராக் கொள்ளும்உத்தமனை *
நற்றவர்போற்றும்இராமாநுசனை இந்நானிலத்தே
பெற்றனன் * பெற்றபின் மற்றறியேன்ஒருபேதைமையே. 57

பேதையர்வேதப்பொருளிதென்று உன்னி * பிரமம்நன்றென்று
ஓதி மற்றெல்லாவுயிரும்அஃதென்று * உயிர்கள்மெய்விட்டு
ஆதிப்பரனொடொன்றாமென்றுசொல்லும் அவ்வல்லலெல்லாம்
வாதில்வென்றான் * எம்இராமாநுசன் மெய்ம்மதிக்கடலே. 58

கடலளவாயதிசையெட்டினுள்ளும் கலியிருளே *
மிடைதருகாலத்து இராமாநுசன் * மிக்கநான்மறையின்
சுடரொளியால் அவ்விருளைத்துரந்திலனேல் உயிரை
யுடையவன் * நாரணனென் றறிவாரில்லை உற்றுணர்ந்தே. 59

உணர்ந்தமெய்ஞ்ஞானியர் யோகம்தொறும் * திருவாய்மொழியின்
மணந்தரும் இன்னிசைமன்னுமிடந்தொறும் * மாமலராள்
புணர்ந்தபொன்மார்பன் பொருந்தும்பதிதொறும்புக்குநிற்கும்
குணந்திகழ்கொண்டல் * இராமாநுசன் எம்குலக்கொழுந்தே. 60

கொழுந்துவிட்டோடிப்படரும் வெங்கோள்வினையால் * நிரயத்து
அழுந்தியிட்டேனை வந்துஆட்கொண்டபின்னும் * அருமுனிவர்
தொழுந்தவத்தோன் எம்இராமாநுசன் தொல்புகழ்சுடர்மிக்கு
எழுந்தது * அத்தால்நல்லதிசயம்கண்டது இருநிலமே. 61

இருந்தேன் இருவினைப்பாசம்கழற்றி * இன்றுயான்இறையும்
வருந்தேன் இனி எம்இராமாநுசன் * மன்னுமாமலர்த்தாள்
பொருந்தாநிலையுடைப்புன்மையினோர்க்கு ஒன்றும்நன்மைசெய்யாப்
† பெருந்தேவரைப்பரவும் * பெரியோர்தம்கழல்பிடித்தே. 62

பிடியைத்தொடரும் களிறென்ன * யான்உன்பிறங்கியசீர்
அடியைத்தொடரும்படி நல்கவேண்டும் * அறுசமயச்
செடியைத்தொடரும் மருள்செறிந்தோர்சிதைந்தோடவந்து இப்
படியைத்தொடரும் * இராமாநுசா! மிக்கபண்டிதனே! 63

பண்தருமாறன் பசுந்தமிழ் * ஆனந்தம்பாய்மதமாய்
விண்டிட எங்களிராமாநுசமுனிவேழம் * மெய்ம்மை
கொண்டநல்வேதக்கொழுந்தண்டமேந்திக் குவலயத்தே
மண்டிவந்தேன்றது * வாதியர்காள்! உங்கள்வாழ்வற்றதே. 64

† ‘பெருந்தேவனை’ என்றும் பாடம்.

வாழ்வற்றது தொல்லைவாதியர்க்கு என்றும்மறையவர்தம்
தாழ்வற்றது தவம்தாரணிபெற்றது * தத்துவநூல்
கூழற்றது குற்றமெல்லாம்பதித்தகுணத்தினர்க்குஅந்
நாழற்றது * நம்இராமாநுசன்தந்த ஞானத்திலே. 65

ஞானம்கனிந்த நலங்கொண்டு * நாள்தொறும்நைபவர்க்கு
வானம்கொடுப்பது மாதவன் * வல்வினையேன்மனத்தில்
ஈனம்கடிந்தஇராமாநுசன் தன்னைஎய்தினர்க்குஅத்
தானம்கொடுப்பது * தன்தகவென்னும் சரண்கொடுத்தே. 66

சரணமடைந்த தருமனுக்கா * பண்டுநூற்றுவரை
மரணமடைவித்த மாயவன் * தன்னைவணங்கவைத்த
கரணமிவை உமக்கன்றென்றுஇராமாநுசன் உயிர்கட்கு
அரணங்கமைத்திலனேல் * அரணார் மற்றிவ்வாருயிர்க்கே. 67

ஆரெனக்கின்று நிகர்சொல்லில் * மாயன் அன்றைவர்தெய்வத்
தேரினில் செப்பியகீதையின்செம்மைப் * பொருள்தெரியப்
பாரினில்சொன்ன இராமாநுசனைப் பணியும்நல்லோர்
சீரினில்சென்றுபணிந்தது * என்ஆவியும்சிந்தையுமே. 68

சிந்தையினோடுகரணங்கள் யாவும்சிதைந்து * முன்னாள்
அந்தமுற்றாழ்ந்ததுகண்டு * இவைஎன்தனக்குஅன்றுஅருளால்
தந்தஅரங்கனும்தன்சரண்தந்திலன் தான்அதுதந்து *
எந்தைஇராமாநுசன் வந்தெடுத்தனன் இன்றுஎன்னையே. 69

என்னையும்பார்த்துஎன்னியல்வையும்பார்த்து * எண்ணில்பல்குணத்த
உன்னையும்பார்க்கில் அருள்செய்வதே நலம் * அன்றிஎன்பால்
பின்னையும்பார்க்கில்நலமுளதே உன்பெருங்கருணை
தன்னை என்பார்ப்பர் ? * இராமாநுசா ! உன்னைச்சார்ந்தவரே. 70

சார்ந்ததுஎன்சிந்தை உன்தாளிணைக்கீழ் * அன்புதான்மிகவும்
கூர்ந்தது அத்தாமரைத்தாள்களுக்கு * உன்தன்குணங்களுக்கே
தீர்ந்ததுஎன்செய்கை முன்செய்வினை நீசெய்வினையதனால்
பேர்ந்தது * வண்மைஇராமாநுசா ! எம்பெருந்தகையே ! 71

கைத்தனன் தீயசமயக்கலகரை * காசினிக்கே
உய்த்தனன் தூயமறைநெறிதன்னை * என்றுஉன்னிஉள்ளம்
நெய்த்தஅன்போடு இருந்தேத்தும நிறைபுகழோருடனே
வைத்தனன்என்னை * இராமாநுசன் மிக்கவண்மைசெய்தே 72

வண்மையினாலும் தன்மாதகவாலும் * மதிபுரையும்
தண்மையினாலும் இத்தாரணியோர்கட்கு * தான்சரணாய்
உண்மைநன்ஞானமுரைத்த இராமாநுசனை உன்னும்
திண்மையல்லால் எனக்கில்லை * மற்றோர்நிலை தேர்ந்திடிலே. 73

தேரார் மறையின்திறமென்று * மாயவன்தீயவரைக்
கூராழிகொண்டுகுறைப்பது * கொண்டலனையவண்மை
ஏரார்குணத்தஎம்இராமாநுசன் அவ்வெழில்மறையில்
சேராதவரைச்சிதைப்பது * அப்போதொருசிந்தைசெய்தே. 74

செய்த்தலைச்சங்கம் செழுமுத்தமீனும் * திருவரங்கர்
கைத்தலத்துஆழியும் சங்கமும்ஏந்தி * நங்கண்முகப்பே
மொய்த்தலைத்துஉன்னைவிடேனென்றிருக்கிலும் நின்புகழே
மொய்த்தலைக்கும்வந்து * இராமாநுசா! என்னைமுற்றும்நின்றே. 75

$ நின்றவண்கீர்த்தியும் நீள்புனலும் * நிறைவேங்கடப்பொற்
குன்றமும்வைகுந்தநாடும் குலவியபாற்கடலும் *
உன்தனக்குஎத்தனையின்பந்தரும்? உன்னிணைமலர்த்தாள்
என்தனக்கும்அது * இராமாநுசா! * இவைஈந்தருளே. 76

ஈந்தனன்ஈயாதஇன்னருள் * எண்ணில்மறைக்குறும்பைப்
பாய்ந்தனன் அம்மறைப்பல்பொருளால் * இப்படியனைத்தும்
ஏய்ந்தனன்கீர்த்தியினால் என்வினைகளைவேர்பறியக்
காய்ந்தனன் * வண்மைஇராமாநுசற்குஎன்கருத்துஇனியே? 77

கருத்தில்புகுந்து உள்ளில்கள்ளம்கழற்றி * கருதரிய
வருத்தத்தினால் மிகவஞ்சித்து * நீஇந்தமண்ணகத்தே
திருத்தித்திருமகள்கேள்வனுக்குஆக்கியபின் என்னெஞ்சில்
பொருத்தப்படாது * எம்இராமாநுசா! மற்றோர்பொய்ப்பொருளே.

பொய்யைச்சுரக்கும் பொருளைத்துரந்து * இந்தப்பூதலத்தே
மெய்யைப்புரக்கும் இராமாநுசன்நிற்க * வேறுநம்மை
உய்யக்கொள்ளவல்லதெய்வம் இங்குயாதென்றுஉலர்ந்துஅவமே
ஐயப்படாநிற்ப * வையத்துள்ளோர் நல்லறிவிழந்தே. 79

நல்லார்பரவும்இராமாநுசன் * திருநாமம்நம்ப
வல்லார்திறத்தை மறவாதவர்கள்யவர் * அவர்க்கே
எல்லாவிடத்திலும்என்றும் எப்போதிலும் எத்தொழும்பும்
சொல்லால்மனத்தால் * கருமத்தினால்செய்வன்சோர்வின்றியே. 80

சோர்வின்றி உன்தன்துணையடிக்கீழ் * தொண்டுபட்டவர்பால்
சார்வின்றிநின்றஎனக்கு * அரங்கன்செய்யதாளிணைகள்
பேர்வின்றிஇன்று பெறுத்தும்இராமாநுசா! இனிஉன்
சீரொன்றியகருணைக்கு * இல்லைமாறு தெரிவுறிலே. 81

தெரிவுற்றஞானம் செறியப்பெறாது * வெந்தீவினையால்
உருவற்றஞானத்து உழல்கின்றஎன்னை * ஒருபொழுதில்
பொருவற்றகேள்வியனாக்கிநின்றான் என்னபுண்ணியனோ?
தெரிவுற்றகீர்த்தி * இராமாநுசனென்னும் சீர்முகிலே 82

சீர்கொண்டு பேரறம்செய்து * நல்வீடுசெறிதுமென்னும்
பார்கொண்டமேன்மையர் கூட்டனல்லேன் * உன்பதயுகமாம்
ஏர்கொண்டவீட்டை எளிதினில்எய்துவன் உன்னுடைய
கார்கொண்டவண்மை * இராமாநுசா! இதுகண்டுகொள்ளே. 83

கண்டுகொண்டேன் எம்இராமாநுசன் தன்னை * காண்டலுமே [நோய்
தொண்டுகொண்டேன் அவன்தொண்டர்பொற்றாளில்*என்தொல்லைவெந்
விண்டுகொண்டேன் அவன் சீர்வெள்ளவாரியைவாய்மடுத்து இன்று
உண்டுகொண்டேன் * இன்னம்உற்றனஓதில்உவப்பில்லையே. 84

ஓதியவேதத்தின் உட்பொருளாய் * அதனுச்சிமிக்க
சோதியைநாதனெனஅறியாது உழல்கின்றதொண்டர் *
பேதமைதீர்த்தஇராமாநுசனைத் தொழும்பெரியோர்
பாதமல்லால்என்தன் ஆருயிர்க்கு * யாதொன்றும்பற்றில்லையே. 85

பற்று மனிசரைப்பற்றி * அப்பற்றுவிடாதவரே
உற்றாரெனஉழன்று ஓடிநையேன்இனி * ஒள்ளியநூல்
கற்றார்பரவும்இராமாநுசனைக் கருதும்உள்ளம்
பெற்றார்யவர் * அவர்எம்மைநின்றாளும்பெரியவரே. 86

பெரியவர்பேசிலும் பேதையர்பேசிலும் * தன்குணங்கட்கு
உரியசொல்லென்று § முடையவனென்றென்று * உணர்வின்மிக்கோர்
தெரியும்வண்கீர்த்தி இராமாநுசன் மறைதேர்ந்துஉலகில்
புரியுநன்ஞானம் * பொருந்தாதவரைப் பொரும்கலியே. 87

கலிமிக்கசெந்நெல் கழனிக்குறையல் * கலைப்பெருமான்
ஒலிமிக்கபாடலையுண்டு தன்னுள்ளம் தடித்து * அதனால்
வலிமிக்கசீயம்இராமாநுசன் மறைவாதியராம்
புலிமிக்கதென்று * இப்புவனத்தில்வந்தமை போற்றுவனே. 88

போற்றரும்சீலத்துஇராமாநுச! * நின்புகழ்தெரிந்து
சாற்றுவனேல் அதுதாழ்வுஅதுதீரில் * உன்சீர்தனக்குஓர்
ஏற்றமென்றேகொண்டிருக்கிலும் என்மனமேத்தியன்றி
ஆற்றகில்லாது * இதற்குஎன்னினைவாயென்றிட்டஞ்சுவனே: 89

‡ நினையார்பிறவியை நீக்கும்பிரானை * இந்நீணிலத்தே
எனையாளவந்த இராமாநுசனை * இருங்கவிகள்
புனையார் புனையும்பெரியவர்தாள்களில் பூந்தொடையல்
வனையார் * பிறப்பில்வருந்துவர் மாந்தர்மருள்சுரந்தே. 90

மருள்சுரந்து ஆகமவாதியர்கூறும் * அவப்பொருளாம்
இருள்சுரந்தெய்த்த உலகிருள்நீங்க * தன்ஈண்டியசீர்
அருள்சுரந்துஎல்லாவுயிர்கட்கும்நாதன் அரங்கனென்னும்
பொருள்சுரந்தான் * எம்இராமாநுசன் மிக்கபுண்ணியனே. 91

---

§ 'உடையவரென்று' என்றும் பாடம்.

‡ 'நினைவார்பிறவியை' என்று பாடாந்தரம்.

பரோன்பு புரிந்துமிலேன் * அடிபோற்றிசெய்யும்
நுங்கேள்வி நுவன்றுமிலேன் * செம்மைநூற்புலவர்க்கு
நங்கீர்த்தி இராமாநுச! இன்றுநீபுகுந்துஎன்
ர்ளும் நெஞ்சுள்ளும் * நின்றஇக்காரணம் கட்டுரையே. 92

பொருளைமறைப்பொருளென்று * கயவர்சொல்லும்
டக்கெடுக்கும் பிரானல்லனே? * என்பெருவினையைக்
ழங்கொடு தன்னருளென்னும்ஒள்வாளுருவி
கலைந்த * இராமாநுசனென்னும் மெய்த்தவனே. 93

நம்செல்வம் தரவுந்தரும் * ‡ சலியாப்பிறவிப்
நம் தீவினைபாற்றித்தரும் * பரந்தாமமென்னும்
ரும் தீதில்இராமாநுசன் தன்னைச்சார்ந்தவர்கட்கு
நந்தேன் * அவன்சீரன்றி யானொன்றும்உள்மகிழ்ந்தே. 94

ன்றுஉயிர்களுக்கு உற்றனவேசெய்து * அவர்க்குஉயவே
ம்பாலும் பரிவிலனாம்படி * பல்லுயிர்க்கும்
ன்தலைநின்று வீடளிப்பான் எம்இராமாநுசன்
ன்தலத்துஉதித்து * மறைநாலும வளர்த்தனனே. 95

பிணிகொண்ட வல்வினையால் * மிக்கநல்வினையில்
துணிவு கிடைத்தறியாது * முடைத்தலையூன்
ளவும் தரித்தும்விழுந்தும் தனிதிரிவேற்கு
ம்இறைவர் * இராமாநுசன்தன்னை உற்றவரே. 96

புற்றுட்செய்யும் தன்மையினோர் * மன்னுதாமரைத்தாள்
புற்றுட்செய்ய என்னையுற்றான் இன்று * தன்தகவால்
புற்றான்றித்தகைமையுற்றுறில்லையென்றறிந்து
புற்றுரை * இராமாநுசன் குணம்சாற்றிடுமே. 97

மே இனியசுவர்க்கத்தில் * இன்னும்நரகிலிட்டுச்
அவற்றைத்தொடர்தருதொல்லை * சுழல்பிறப்பில்
இனிநம்இராமாநுசன் நம்மைநம்வசத்தே
சரணமென்றால் * மனமே! நையல் மேவுதற்கே. 98

மணரும் சாக்கியப்பேய்களும் * தாழ்சடையோன்
ற்றமேசாம்பரும் சூனியவாதரும் * நான்மறையும்
றும்புசெய் நீசருமாண்டனர் நீணிலத்தே
ற்பகம் * எம்இராமாநுசமுனி போந்தபின்னே. 99

துஎன்னெஞ்சென்னும் பொன்வண்டு * உனதடிப்போதில்ஒ
ளிதேனுண்டு அமர்ந்திடவேண்டி * நின்பாலதுவே [ண்சீ
வேண்டும்இராமாநுசா! இதுவன்றிஒன்றும்
ல்லாது * இனிமற்றொன்றுகாட்டி மயக்கிடலே. 100

‡ ‘சரியா’ என்றும் பாடம்.

மயக்கும்இருவினை § வல்லியில்பூண்டு * மதிமயங்கித்
துயக்கும்பிறவியில் தோன்றியஎன்னை * துயரகற்றி
உயக்கொண்டுநல்கும்இராமாநுச ! என்றதுஉன்னையுன்னி
நயக்குமவர்க்கு இதிழுக்கென்பர் * நல்லவரென்றும்நைந்தே. 101

நையும்மனம் உன்குணங்களைஉன்னி * என்நாஇருந்துஎம்
ஐயன்இராமாநுசனென்றழைக்கும் * அருவினையேன்
கையும்தொழும் கண்கருதிடும் காணக்கடல்புடைசூழ்
வையமிதனில் * உன்வண்மை என்பால்என்வளர்ந்ததுவே? 102

வளர்ந்தவெங்கோப மடங்கலொன்றாய் * அன்றுவாளவுணன்
கிளர்ந்த பொன்னாகம் கிழித்தவன் * கீர்த்திப் பயிரெழுந்து
விளைந்திடும்சிந்தைஇராமாநுசன் என்தன்மெய்வினைநோய்
களைந்து நன்ஞானம்அளித்தனன் * கையில்கனியென்னவே. 103

கையில்கனியென்னக் கண்ணனைக்காட்டித்தரிலும் * உன்தன்
மெய்யில்பிறங்கியசீரன்றி வேண்டிலன்யான் * நிரயத்
|| தொய்யில்கிடக்கிலும் சோதிவிண்சேரிலும் இவ்வருள் நீ
செய்யில்தரிப்பன் * இராமாநுசா ! என்செழுங்கொண்டலே ! 104

$ செழுந்திரைப்பாற்கடல் கண்துயில்மாயன் * திருவடிக்கீழ்
விழுந்திருப்பார்நெஞ்சில் மேவுநன்ஞானி * நல்வேதியர்கள்
தொழும்திருப்பாதன்இராமாநுசனைத் தொழும்பெரியோர்
எழுந்திரைத்தாடும்இடம் * அடியேனுக்கு இருப்பிடமே. 105

$ இருப்பிடம் வைகுந்தம்வேங்கடம் * மாலிருஞ்சோலையென்னும்
பொருப்பிடம் மாயனுக்குஎன்பர்நல்லோர் * அவைதன்னொடும்வந்
திருப்பிடம்மாயன்இராமாநுசன்மனத்துஇன்று அவன்வந்
திருப்பிடம் * என்தனிதயத்துள்ளே தனக்குஇன்புறவே. 106

$ இன்புற்றசீலத்து இராமாநுசா ! * என்றும்எவ்விடத்தும்
என்புற்றநோயுடல்தோறும் பிறந்திறந்து * எண்ணரிய
துன்புற்றுவீயினும்சொல்லுவது ஒன்றுஉண்டுஉன்தொண்டர்கட்கே
அன்புற்றிருக்கும்படி * என்னையாக்கி அங்காட்படுத்தே. 108

$ அங்கயல்பாய்வயல் தென்னரங்கன் * அணியாகமன்னும்
பங்கயமாமலர்ப்பாவையைப் போற்றுதும் * பத்தியெல்லாம்
தங்கியதென்னத்தழைத்துநெஞ்சே ! நம்தலைமிசையே
பொங்கியகீர்த்தி *இராமாநுச னடிப்பூமன்னவே. 107

எம்பெருமானார் திருவடிகளே சரணம்.

திருவரங்கத்தமுதனார் திருவடிகளே சரணம்.

இராமாநுசநூற்றந்தாதி ஸம்பூர்ணம்.

---

§ 'வல்லியைப்பூண்டே' என்றும் பாடம்.

|| 'தொய்யில்கிடக்கிலென் சோதிவிண்சேரிலென்' என்றும் பாடம்.

# நாலாயிரத் தனியன்கள்



ஸ்ரீஶைலேஶ தயாபாத்ரம் தீபக்த்யாதிகுணார்ணவம்-
யதீந்த்ரப்ரவணம் வந்தே ரம்யஜாமாதரம்முநிம்.
லக்ஷ்மீநாதஸமாரம்பாம் நாதயாமுநமத்யமாம்-
அஸ்மதாசார்யபர்யந்தாம் வந்தே குருபரம்பராம்.

யோநித்யமச்யுதபதாம்புஜயுக்மருக்ம
வ்யாமோஹதஸ்ததிதராணி த்ருணாய மேநே-
அஸ்மத்குரோர்பகவதோஸ்ய தயைகஸிந்தோ:
ராமாநுஜஸ்ய சரணௌ ஶரணம் ப்ரபத்யே.

மாதா பிதா யுவதயஸ் தநயா விபூதிஸ்
ஸர்வம் யதேவ நியமேந மதந்வயாநாம்
ஆத்யஸ்ய ந: குலபதேர் வகுளாபிராமம்
ஸ்ரீமத்ததங்க்ரியுகளம் ப்ரணமாமி மூர்த்நா.

பூதம்ஸரஸ்யமஹதாஹ்வயபட்டநாத
ஸ்ரீபக்திஸாரகுலஶேகரயோகிவாஹாந்-
பக்தாங்க்ரிரேணுபரகாலயதீந்த்ரமிஶ்ராந்
ஸ்ரீமத்பராங்குஶமுநிம் ப்ரணதோ஽ஸ்மி நித்யம்.
குருமுகமநதீத்ய ப்ராஹவேதாநஶேஷாந்
நரபதிபரிக்லுப்தம் ஶுல்கமாதாதுகாம:-
ஶ்வஶுரமமரவந்த்யம்ரங்கநாதஸ்யஸாக்ஷாத்
த்விஜகுலதிலகம்தம் விஷ்ணுசித்தம் நமாமி.
மின்னார்தடமதிள்சூழ்வில்லிபுத்தூரென்று, ஒருகால் *
சொன்னார்கழற்கமலஞ்சூடினோம் *—முன்னாள்
கிழியறுத்தானென்றுரைத்தோம் * கீழ்மையினிற்சேரும்
வழியறுத்தோம் நெஞ்சமே! வந்து.
பாண்டியன்கொண்டாடப் பட்டர்பிரான்வந்தானென்று *
ஈண்டியசங்கம்எடுத்தூத *—வேண்டிய
வேதங்களோதிவிரைந்துகிழியறுத்தான் *
பாதங்கள் யாமுடையபற்று.

---

நீளாதுங்கஸ்தநகிரிதடீஸுப்தமுத்போத்ய க்ருஷ்ணம்
பாரார்த்யம் ஸ்வம் ஶ்ருதிஶதஶிரஸ்ஸித்தமத்யாபயந்தீ-
ஸ்வோச்சிஷ்டாயாம் ஸ்ரஜிநிகளிதம் யாபலாத்க்ருத்யபுங்க்தே
கோதா தஸ்யை நமஇதமிதம் பூயஏவாஸ்து பூய:
அன்னவயல்புதுவையாண்டாள் * அரங்கற்குப்
பன்னுதிருப்பாவைப்பல்பதிகம் *—இன்னிசையால்
பாடிக்கொடுத்தாள் நற்பாமாலை, பூமாலை *
சூடிக்கொடுத்தாளைச்சொல்லு.
சூடிக்கொடுத்தசுடர்க்கொடியே! * தொல்பாவை
பாடியருளவல்லபல்வளையாய்! *—நாடிநீ

வேங்கடவற்கென்னைவிதியென்றவிம்மாற்றம் *
நாம்கடவாவண்ணமேநல்கு.

அல்லிநாள் தாமரைமேலாரணங்கினின் துணைவி *
மல்லிநாடாண்டமடமயில் *—மெல்லியலாள்
ஆயர்குலவேந்தனாகத்தாள் * தென்புதுவை
வேயர்பயந்தவிளக்கு.

இன்னமுதமூட்டுகேனிங்கேவா பைங்கிளியே! *
தென்னரங்கம்பாட வல்லசீர்ப்பெருமாள் *—பொன்னஞ்
சிலைசேர் நுதலியர்வேள் சேரலர்கோன் * எங்கள்
குலசேகரனென்றேகூறு.

ஆரங்கெடப்பரனன்பர்கொள்ளாரென்று, அவர்களுக்கே
வாரங்கொடுகுடப்பாம்பில்கையிட்டவன் * மாற்றலரை
வீரங்கெடுத்தசெங்கோல்கொல்லிகாவலன்வில்லவர்கோன் *
சேரன் குலசேகரன் முடிவேந்தர்சிகாமணியே.

தருச்சந்தப்பொழில்தழுவுதாரணியில்துயர்தீர *
திருச்சந்தவிருத்தம்செய் திருமழிசைப்பான்வருமூர் *
கருச்சந்தும்காரகிலும்கமழ்கோங்குமணநாறும் *
திருச்சந்தத்துடன்மருவு திருமழிசைவளம்பதியே.

உலகுமழிசையுமுள்ளுணர்ந்து, தம்மில்
புலவர் புகழ்க்கோலால் தூக்க *—உலகுதன்னை
வைத்தெடுத்தபக்கத்தும், மாநீர்மழிசையே
வைத்தெடுத்தபக்கம்வலிது.

மற்றொன்றும்வேண்டாமனமே! மதிளரங்கர் *
கற்றினம்மேய்த்தகழலிணைக்கீழ் *—உற்ற
திருமாலைபாடும்சீர்த்தொண்டரடிப்பொடியெம்
பெருமானை * எப்பொழுதும்பேசு.

¶ தமேவ மத்வா பரவாஸுதேவம்
ரங்கேசயம் ராஜவதர்ஹணீயம்-
ப்ராபோதகீம் யோக்ருத ஸூக்திமாலாம்
பக்தாங்க்ரிரேணும் பகவந்தமீடே.

மண்டங்குடியென்பர்மாமறையோர்மன்னியசீர் *
தொண்டரடிப்பொடிதொன்னகரம் *—வண்டு
திணர்த்தவயல்தென்னரங்கத்தம்மானை * பள்ளி
யுணர்த்தும்பிரானுதித்தவூர்.

¶ 'த்வாமேவமத்வா' என்ற பாடம் இவ்விருத்தத்துக்குச் சேருமென்பர்.

ஆபாதசூடமநுபூய ஹரிம் ஸயாநம்
மத்யேகவேர துஹிதுர் முதிதாந்தராத்மா-
அத்ருஷ்டதாம் நயநயோர் விஷயாந்தராணும்
யோநிஸ்சிகாய மநவை முநிவாஹநம்தம்.
காட்டவேகண்டபாதகமலம்நல்லாடையுந்தி *
தேட்டருமுதரபந்தம் திருமார்புகண்டம்செவ்வாய்
வாட்டமில்கண்கள்மேனி முனியேறித்தனிபுகுந்து
பாட்டினால்கண்டுவாழும் பாணர்தாள்பரவினோமே.

கலயாமி கலித்வம்ஸம் கவிம் லோகதிவாகரம்-
யஸ்ய கோபி: ப்ரகாஸாபி ராவித்யம் நிஹதம் தம:
வாழிபரகாலன் வாழிகலிகன்றி *
வாழிகுறையலூர்வாழ்வேந்தன் *—வாழியரோ
மாயோனைவாள்வலியால்மந்திரங்கொள்மங்கையர்கோன் *
தூயோன்சுடர்மானவேல்.
நெஞ்சுக்கிருள்கடிதீபம் அடங்காநெடும்பிறவி
நஞ்சுக்குநல்லவமுதம் தமிழ்நன்னூல்துறைகள்
அஞ்சுக்கிலக்கியம் ஆரணசாரம் * பரசமயப்
பஞ்சுக்கனலின்பொறி பரகாலன்பனுவல்களே.
எங்கள்கதியே! இராமாநுசமுனியே! *
சங்கைகெடுத்தாண்டதவராசா! —*பொங்குபுகழ்
மங்கையர்கோனீந்த மறையாயிரமனைத்தும்
தங்குமனம்நீயெனக்குத்தா.

கைதைசேர்பூம்பொழில்சூழ்கச்சிநகர்வந்துதித்த
பொய்கைப்பிரான் கவிஞர்போரேறு *—வையத்
தடியவர்கள்வாழவருந் § தமிழ்நூற்றந்தாதி *
படிவிளங்கச்செய்தான்பரிந்து.

என்பிறவிதீரவிறைஞ்சினேன் இன்னமுதா *
அன்பேதகளியளித்தானை *—நன்புகழ்சேர்
சீதத்தார்முத்துக்கள்சேரும் * கடல்மல்லைப்
பூதத்தார்பொன்னங்கழல்.

சீராரும்மாடத்திருக்கோவலூாதனுள்
காரார்கருமுகிலைக்காணப்புக்கு *—ஓராத்
திருக்கண்டேனென்றுரைத்தசீரான்கழலே *
உரைக்கண்டாய் நெஞ்சே! உகந்து.

§ 'தமிழந்தாதி' என்ற பாடம் செய்யுளிலக்கணத்துக்குச் சேரும்.

நாராயணன்படைத்தான் நான்முகனை * நான்முகனுக்கு
ஏரார்சிவன்பிறந்தானென்னுஞ்சொல் *—சீரார்
மொழிசெப்பிவாழலாம் நெஞ்சமே! * மொய்பூ
மழிசைப்பரனடியேவாழ்த்து.

---

கருவிருத்தக்குழிநீத்தபின்காமக்கடுங்குழிவீழ்ந்து *
ஒருவிருத்தம்புக்குழலுறுவீ ருயிரின்பொருள்கட்கு *
ஒருவிருத்தம்புகுதாமல் குருகையர்கோனுரைத்த *
திருவிருத்தத்தோரடிகற்றிரீர் திருநாட்டகத்தே.

---

காசினியோர்தாம்வாழக் கலியுகத்தேவந்துதித்து *
ஆசிரியப்பாவதனாலருமறைநூல்விரித்தானை *
தேசிகனைப் பராங்குசனைத் திகழ்வகுளத்தாரானை *
மாசடையாமனத்துவைத்து மறவாமல்வாழ்த்துதுமே.

---

முந்துற்றநெஞ்சே! முயற்றிதரித்துரைத்து *
வந்தித்துவாயாரவாழ்த்தி *—சந்த
முருகூறும்சோலைசூழ்மொய்பூம்பொருநல் *
குருகூரன் மாறன்பேர் கூறு.
வாழிபரகாலன் வாழிகலிகன்றி *
வாழிகுறையலூர் வாழ்வேந்தன் *—வாழியரோ
மாயோனைவாள்வலியால் மந்திரங்கொள் மங்கையர்கோன் *
தூயோன்சுடர்மானவேல்.

---

முள்ளிச்செழுமலரோதாரான்முளைமதியம் *
கொள்ளிக்கென்னுள்ளம் கொதியாமே *—வள்ளல்
திருவாளன் சீர்க்கலியன் கார்க்கலியைவெட்டி *
மருவாளன் தந்தான்மடல்.
பொன்னுலகில்வானவரும் பூமகளும்போற்றிசெய்யும் *
நன்னுதலீர்! நம்பிநறையூரர் *—மன்னுலகில்
என்னிலைமைகண்டுமிரங்காரேயாமாகில் *
மன்னுமடலூர்வன்வந்து.
அவிதிதவிஷயாந்தர: ஸடாரே
ருபநிஷதாமுபகாரமாத்ரபோக:
அபிசகுணவஸாத்ததேகஸேஷீ
மதுரகவிர்ஹ்ருதயே மமாவிரஸ்து
வேறொன்றும்நானறியேன் வேதம்தமிழ்செய்த *
மாறன் சடகோபன் வண்குருகூர்— ஏறுஎங்கள்
வாழ்வாமென்றேத்தும்மதுரகவியா ரெம்மை
ஆள்வார், அவரே யரண்.

பக்தாம்ருதம் விச்வஜநாநுமோதநம்
ஸர்வார்த்ததம் ஸ்ரீ ஶடகோப வாங்மயம்
ஸஹஸ்ரசாகோபநிஷத்ஸமாகமம்
நமாம்யஹம் த்ராவிடவேதஸாகரம்
திருவழுதிநாடென்றும் தென்குருகூரென்றும் *
மருவினியவண்பொருநலென்றும் *—அருமறைக
ளந்தாதிசெய்தா னடியிணையே யெப்பொழுதும் *
சிந்தியாய் நெஞ்சே! தெளிந்து.
மனத்தாலும் வாயாலும் வண்குருகூர் பேணும் *
இனத்தாரையல்லா திறைஞ்சேன் *—தனத்தாலும்
ஏதுங்குறைவிலேன் * எந்தைசடகோபன்
பாதங்கள் யாமுடையபற்று.
ஏய்ந்தபெருங்கீர்த்திஇராமாநுசமுனிதன் *
வாய்ந்தமலர்ப்பாதம் வணங்குகின்றேன் —ஆய்ந்தபெரு
சீரார்சடகோபன் செந்தமிழ்வேதம்தரிக்கும்
பேராதவுள்ளம்பெற.
வான்திகழும் சோலை மதிளரங்கர் வண்புகழ்மேல் *
ஆன்றதமிழ்மறைகளாயிரமும் *—ஈன்ற
முதல்தாய்சடகோபன் மொய்ம்பால்வளர்த்த *
இதத்தாய்இராமாநுசன்.
மிக்கவிறைநிலையும் மெய்யாமுயிர்நிலையும் *
தக்கநெறியும் தடையாகித்—தொக்கியலும் *
ஊழ்வினையும் வாழ்வினையு மோதும் குருகையர்கோன் *
யாழினிசை வேதத்தியல்.
முன்னைவினையகலமூங்கிற்குடியமுதன்
பொன்னங்கழற்கமலப்போதிரண்டும் *—என்னுடைய
சென்னிக்கணியாகச்சேர்த்தினேன், தென்புலத்தார்க்கு *
என்னுக்கடவுடையேன் யான்.
நயந்தருபேரின்பமெல்லாம் பழுதென்றுநண்ணினர்பால் *
சயந்தருகீர்த்திஇராமாநுசமுனிதாளிணைமேல் *
உயர்ந்தகுணத்துத்திருவரங்கத்தமுதோங்கும் * அன்பால்
இயம்புங்கலித்துறையந்தாதியோதவிசைநெஞ்சமே!
சொல்லின்தொகைகொண்டுனதடிப்போதுக்குத்தொண்டுசெய்யும் *
நல்லன்பரேத்துமுன்நாமமெல்லாம் என்தன்நாவினுள்ளே *
அல்லும்பகலுமமரும்படிநல்கு * அறுசமயம்
வெல்லும்பரம! இராமாநுச! இதுஎன்விண்ணப்பமே.

நாலாயிரத் தனியன்கள் ஸம்பூர்ணம்
ஆழ்வார் திருவடிகளே சரணம்
எம்பெருமானார் திருவடிகளே சரணம்
ஜீயர் திருவடிகளே சரணம்

ஸ்ரீமத் வேதாந்ததேசிகன் அருளிச்செய்த ப்ரபந்தத்தில்

# அடைக்கலப்பத்து

---

### தனியன்

சீரொன்று தூப்புல் திருவேங்கட முடையான் *
பாரொன்றச் சொன்ன பழமொழியுள்—ஓரொன்று *
தானே யமையாதோ தாரணியில் வாழ்வார்க்கு *
வானேறப் போமளவும் வாழ்வு.

### கலி விருத்தம்

‡பத்திமுதலாமவற்றில் பதியெனக்குக்கூடாமல் *
எத்திசையுமுழன்றோடி இளைத்துவிழுங்காகம்போல் *
முத்திதருநகரேழில் முக்கியமாங்கச்சிதனில் *
அத்திகிரியருளாளர்க்கு அடைக்கலம்நான்புகுந்தேனே. 1

சடைமுடியன்சதுமுகனென்று இவர்முதலாந்தரமெல்லாம் *
அடையவினைப்பயனாகி அழிந்துவிடும்படிகண்டு *
கடிமலராள்பிரியாத கச்சிநகரத்திகிரி *
இடமுடையஅருளாளர் இணையடிகளடைந்தேனே. 2

தந்திரங்கள்வேறின்றித் தமதுவழியழியாது *
மந்திரங்கள்தம்மாலும் மற்றுமுளவுரையாலும் *
அந்தரங்கண்டடிபணிவா ரெல்லார்க்குமருள்புரியும் *
சிந்துரவெற்பிறையவனார் சீலமல்லதறியேனே. 3

காகமிராக்கதன்மன்னர்காதலி கத்திரபந்து *
நாகமரனயன்முதலா நாகநகரார்தமக்கும் *
போகமுயர்வீடுபெறப் பொன்னருள்செய்தமைகண்டு *
நாகமலைநாயகனார் நல்லடிப்போதடைந்தேனே. 4

உகக்குமவையுகந்து உகவாது அனைத்துமொழிந்து * உறவுகுண
மிகத்துணிவுபெறவுணர்ந்து வியன்காவலெனவரித்து *
சகத்திலொருபுகலில்லாத் தவமறியேன் * மதிட்கச்சி
நகர்க்கருணைநாதனை நல்லடைக்கலமாயடைந்தேனே. 5

அளவுடையாரடைந்தார்க்கும் அதனுரையேகொண்டவர்க்கும் *
வளவுரைதந்தவனருளே மன்னியமாதவத்தோர்க்கும் *
களவொழிவாரெமரென்ன இசைந்தவர்க்குங்காவலராம் *
துளவமுடியருள்வரதர் துவக்கிலெனைவைத்தேனே. 6

உமதடிகளடைகின்றேன் என்றொருகாலுரைத்தவரை *
அமையுமினியென்பவர்போல் அஞ்சலெனக்கரம்வைத்து *
தமதனைத்துமவர்தமக்கு வழங்கியுந்தாமிகவிளங்கும் *
அமையுடையவருளாளர் அடியிணையையடைந்தேனே. 7

திண்மைகுறையாமைக்கும் நிறைகைக்குந்தீவினையால் *
உண்மைமறவாமைக்கு முளமதிபிலுகக்கைக்கும் *
தண்மைகுறையாமைக்குந் தரிக்கைக்குந்தணிகைக்கும் *
வண்மையுடையருளாளர் வாசகங்கள்மறவேனே. 8

சுருதிநினைவிவையறியுந் துணியுடையார்தூய்மொழிகள் *
பரிதிமதியாசிரியர்பாகரந் தேர்ந்தருக்கணங்கள் *
கருதியொருதெளிவாளாற் கலங்கமறுக்கத்திகிரி *
பரிதிமதிநயனமுடைப்பரமனடிபணிந்தேனே. 9

$ திருமகளுந்திருவடிவுந்திருவருளுந்தெள்ளறிவும் *
அருமையிலாமையுமுறவுமளப்பரியவடியரசும் *
கருமமழிப்பளிப்பமைப்புங்கலக்கமிலாவகைநின்ற *
அருள்வரதர்நிலையிலக்கிலம்பெனநானமிழ்ந்தேனே. 10

$ ஆறுபயன்வேறில்லா அடியவர்களனைவர்க்கும் *
ஆறுமதன்பயனுமிவை யொருகாலும்பலகாலும் *
ஆறுபயனெனவே கண்டருளாளரடியிணைமேல் *
கூறியநற்குணவுபாய விலைபத்துங்கோதிலவே. 11

அடிவரவு:—பத்தி சடை தந்திரம் காகம் உகக்கும் அளவுடையார் உமதடிகள் திண்மை சுருதி திருமகள் ஆறு அமலன்.

தேசிகன் திருவடிகளே சரணம்.

---

# மும்மணிக்கோவை

நிலமண்டில வாசிரியப்பா

$ அருள்தருமடியவர்பான்மெய்யைவைத்து *
தெருள்தரநின்றதெய்வநாயக! * நின்
அருளெனுஞ்சீரோரரிவையானதென *
இருள்செகவெமக்கோரின்னொளிவிளக்காய் *
மணிவரையன்னநின் திருவுருவில் *
அணியமராகவலங்கலாயிலங்கி *
நின்படிக்கெல்லாந்தன்படியேற்க *
அன்புடனுன்னோடவதரித்தருளி *
வேண்டுரைகேட்டுமீண்டவைகேட்பித்து *
ஈண்டியவினைகள்மாண்டிடமுயன்று *
தன்னடிசேர்ந்ததமருனையணுக *
நின்னுடன்சேர்ந்துநிற்கும்நின் திருவே.

நேரிசை வெண்பா

திருமாலடியவர்க்கு மெய்யனார் * செய்ய
திருமாமகளென்றுஞ் சேரும் *— திருமார்பில்
இம்மணிக்கோவையுடனேற்கின்றார் * என்றன் இம்
மும்மணிக்கோவை மொழி. 2

கட்டளைக் கலித்துறை

மொழிவார்மொழிவன ‡ மும்மறையாகமயிந்தையில்வந்து *
இழிவாரிழிகவென்றின்னமுழக்கடலாகின்ற *
விழிவாருண்மெய்யர்மெல்லடிவேண்டியமெல்லியர்மேல் *
பொருவாரனங்கர்தம்பூங்கரும்புந்தியபூமழையே. 3

நிலைமண்டிலவாசிரியப்பா

மழையிலெழுந்தமொக்குள்போல்வையம் *
§ அழியவன்றழியாவடியவர்மெய்ய; *
அருமறையின்பொருளாய்க்கிடக்குங்கால் *
திருவுடனமர்ந்ததெய்வநாயக! *
நின்றிருத்தனக்குநீ திருவாகி *
இந்துத்தன்னிலவுடனிலங்குதன்மையினை *
நந்துதலில்லாநல்விளக்காகி *
அந்தமிலமுதவாழியாய்நிற்றி *
பாற்கடல்தன்னிற்பன்மணியன்ன *
சீர்க்கணஞ்சேர்ந்தசிலமெல்லையிலை *
அடியவர்பிழைகள்நின்கருத்தடையாது *
அடையவாண்டருளுமரசனுநீயே *
உயர்ந்தநீயுன்னையெம்முடன்கலந்தனை *
அயிந்தைமாநகரிலமர்ந்தனையெமக்காய் *
சித்திரமணியெனத்திகழுமன்னுருவில் *
அத்திரமணியெனவனைத்துநீயனாகி *
விண்ணினுளமர்ந்தவியனுருவதனால் *
எண்ணியவீரிரண்டுருக்களுமடைதி *
பன்னிருநாமம்பலபலவுருவாய் *
என்னுருவெங்குமெய்திநீநிற்றி
மீனோடாமைக்கேழல்கோளரியாய் *
வானார்குறளாய்மழுப்படைமுனியாய் *
பின்னுமிராமரிருவராய்ப்பாரில் *
துன்னியபாரந்தீர்துவரைமன்னனுமாய் *
கலிதவிர்த்தளிக்குங்கற்கியாய்மற்றும் *
மதிவதற்கென்றும்வல்வினைமாற்ற *
நானாவுருவங்கொண்டுநல்லடியோர் *
வானாரின்பமிங்குறவருதி *

‡ 'மும்முறையாக' என்றும் பாடம்.
§ 'அழியாவொன்று' என்றும் பாடாந்தரம்.

ஒருயிருலகுக்கென்னாநீ திருவோடு *
ஒருயிரெல்லாமேத்தியின்புறுதி *
யாவருமறியாவெங்குநீகரந்து *
மேவுருச்சூழ்ந்துவியப்பினான்மிகுதி *
கொண்டிடவெம்மையடைக்கலமுலகில் *
கண்டிலங்கதியுனையன்றிமற்றொன்றும் *
பல்வகைநின்றநின்படி § யனைத்தும் *
தொல்வகை || காட்டத்துணிந்த தூமறையே. 4

நேரிசை வெண்பா

தூமறையி னுள்ளந் துளங்காத துணிவுதரும் *
ஆமறிவா லார்ந்தடிமை யாகின்றோம் *—பூமறையோன்
பாராயணத்திற் பணியு மயிந்தைநகர் *
நாராயணனார்க்கே நாம். 5

கட்டளைக் கலித்துறை

ஆர்க்குங் கருணை பொழிவா னயிந்தையில் வந்தமர்ந்த
கார்க்கொண்டலைக் கண்ட காதற் புனமயிலக் கண்பனியா *
வேர்க்கும் முகிழ்க்கும் விதிர்விதிர்க்கும் வெள்கி வெவ்வுயிர்க்கும் *
பார்க்கின்றவர்க் கிது நாமென் சொலா லென்று பயிலுவமே. 6

நிலைமண்டில வாசிரியப்பா

பயின்மதி நீயே பயின்மதி தருதலின் *
வெளியும் நீயே வெளியுற நிற்றலின் *
தாயும் நீயே சாயைதந் துகத்தலின் *
தந்தையும் நீயே முந்திநின் றளித்தலின் *
உறவும் நீயே துறவா தொழிதலின் *
உற்றதும் நீயே சிற்றின்ப மின்மையின் *
ஆறும் நீயே யாற்றுக் கருடலின் *
அறமும் நீயே மறநிலை மாய்த்தலின் *
துணைவனும் நீயே யிணையிலை யாதலின் *
துய்யனும் நீயே செய்யா ளுறைதலின் *
காரணம் நீயே நாரண னாதலின் *
கற்பகம் நீயே நற்பதந் தருதலின் *
இறைவனும் நீயே குறையொன் றிலாமையின் *
இன்பமும் நீயே துன்பந் துடைத்தலின் *
யானும் நீயே யென்னு ளுறைதலின் *
எனதும் நீயே யுனதன்றி யின்மையின் *
நல்லாய் நீயே பொல்லாங் கிலாமையின் *
வல்லாய் நீயே வையமுண் டுமிழ்தலின் *
எங்கணு மாகு மெய்ய! நின் வியப்பே *
அங்ஙனே யொக்க வறிவ தாரணமே. 7

§ 'அனைத்தில்' என்றும் பாடம்.
|| 'காட்டுந்துணிந்த தூமறையே' என்றும் பாடம்.

நேரிசை வெண்பா

ஆரணங்கள் தேட வயிந்தைநகர் வந்துதித்த *
காரணராய் நின்ற கடல்வண்ணர்—நாரணனார் *
இப்படிக்கு மிக்கன் றெடுத்த பாதங்கழுவ *
மெய்ப்படிக்க மானதுபொன் வெற்பு. 8

கட்டளைக் கலித்துறை

வெற்புடனொன்றி யயிந்தையில் வெவ்வினைதீர் மருந்தொன்று *
அற்புதமாக வமர்ந்தமை கேட்டருள் வேண்டிநிற்க *
§ பற்பின்மறந்த செய்யாள்படி காட்டிய பண்புடையெம் *
விற்புருவக் கொடிக்கோர் விலங்காமயல் பெற்றனமே. 9

நிலமண்டில வாசிரியப்பா

$ பெற்றனை நீயே மற்றுள தெல்லாம் *
பெறுவது நின்னை யுறுவது கொள்வார் *
நின்னா லன்றி மன்னா ரின்பம் *
நின்பொருட்டு நீ யென்பொருட் டில்லை
நின்னுரு நின்று மின்னுருத் தோன்றும் *
நின்றனக்கு நிகர் நின்னடி யடைவார் *
நின்பா லன்றி யன்பா லுய்யார் *
வாரண மழைக்க வந்த காரணமே. 10

தேசிகன் திருவடிகளே சரணம்.

---

# நவரத்தினமாலை

பதினறுசீர் ஆசிரியச் சந்தவிருத்தம்

$ ஒருமதி யன்ப ருளங் கவர்ந்தன
வுலக மடங்க வளர்ந் தளந்தன
ஒருசடை யொன்றிய கங்கை தந்தன
உரக படங்க ளரங்கு கொண்டன *
தரும முயர்ந்த திசைதன்ன நின்றன
தரும னிரந்த திசைந்து சென்றன
சகட முடைந்து கலங்க வென்றன
தமர்க ளருந்து மருந்தி தென்பன *
திருமகள் செய்ய கரங்க ளொன்றின
திகழ்துள வுந்து மணங் கமழ்ந்தன
செழுமணி கொண்ட சிலம்பி லங்கின
சிலைதனி லன்றொ ரணங் குமிழ்ந்தன *
அருமறை யந்த மமர்ந்த பண்பின
அயன்முடி தன்னி லமர்ந் துயர்ந்தன
அருள்தர வெண்ணி யயிந்தை வந்தன
அடியவர் மெய்யர் மலர்ப்ப தங்களே. 1

---

§ 'பற்பிலமர்ந்த' என்றும் பாடம்.

இருபத்துநான்குசீர் ஆசிரியச்சந்தவிருத்தம்

மகரம்வளரு மளவில்பௌவ மடையவுற் றலைத்தனே
வடிவுகமட மெனவமர்ந்து கிரிதனைத் தரித்தனே
மலியுசுர னுரமிடந்து வசுதைபேர்த் தெடுத்தனே
வலிகொளவுண னுடல்பிளந்து மதலைமெய்க் குதித்தனே *
பகருமூலக மடியளந் தமரர்கட் களித்தனே
பரசுமுனிவன் வடிவுகொண்டு பலவரைத் துணித்தனே
பணியவிசைவில் தசமுகன்தன் முடிகள்பத் தறுத்தனே
படியுமுருவில் வருபிலம்ப வசுரனைத் தகர்த்தனே *
நகரந்துவரையென வுகந்து வரைகரத் தெடுத்தனே
நடமொடியலும் பரியில்வந்து நலிவறுக்க வுற்றனே
நலியும்வினைகள் செகுமருந்தி னலமுறைந்த வெற்பினே
நணுகுகருடநதி கிளர்ந்த புனலுகப்பு வைத்தனே *
அகரமுதல வுரைகொண்டங்கை கணவனுக் களித்தனே
அடையும்வினதை சிறுவனுய்ய வருள்கொடுத் துயர்த்தனே
அடியுமணையு மெனுமனந்த னடிதொழக் களித்தனே
அவனிமருவு திருவயிந்தை யடியவர்க்கு மெய்யனே! 2

கலிச்சந்தவிருத்தம்

புரமுயர்த்த வசுரர்சட்கொர் புறமுரைத்த பொய்யினன் *
வரையெடுத்து மழைதடுத்த மழையொடொத்த மெய்யினன் *
திரைநிரைத்த கடலெரித்த சிலைவளைத்த கையினன் *
அருள்கொடுத்து வினைதவிர்க்கு மடியவர்க்கு மெய்யனே. 3

கலி விருத்தம்

$ தேசத்தா ரில்லையெனுந் தெய்வ நாயகர் *
வாசக் குழல் மாமலராள் மணவாளனார் *
வாசித்தொழு மன்மதனார் மணற் றேப்பில்
மாசிக் கடலாடி மகிழ்ந்து வருவரே. 4

அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்

உருளுஞ் சகடமொன் றுதைத்தா யுலகேழுமுண் டுமிழ்ந்தளந்தாய் *
பொருளு மழனு மிறையாகப் பூண்டே னடிமையினி மீண்டேன் *
இருளு மருளுந் தருமநநா டெழிலா ராழி சங்கேந்தி *
அருளுந் தெருளுந்தர வென்பா லடியோர் மெய்யா! வந்தருளே. 5

எண்சீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்

வஞ்சனைசெய் பூதனையை மலியுஞ் சாட்டை
மல்லரையோர் மதகளிற்றை வானோ ரஞ்சும் *
கஞ்சனைமுன் கடிந்தவளி பாரந் தீர்த்த
காவலனே! கோவலனாய் நின்ற கோவே! *
அஞ்சனமுங் காயாவு மனைய மேனி
அடியவர்க்கு மெய்யனே! அயிந்தை வாழும் *
அஞ்சலென வருள்பொழியும் வள்ளலே! நின்
வடிவழகு மறவாதார் பிறவாதாரே. 6

எண்சீர்க்கழிநெடிலாசிரிய விருத்தம்

மையுமாகடலுமயிலுமாமழையுமணிகளுங்குவளையுங்கொண்ட *
மெய்யனே! அடியார்மெய்யனே! விண்ணோர்சனே! நீசனேனடைந்தேன் *
கையுமாழியுமாய்க்களிறுகாத்தவனே! காலனார்தமரெனைக்கவராது *
ஐயனே! வந்தன்றஞ்சலென்றருளென்னையிந்தைமாநகரமர்ந்தானே. 7

எண்சீர்க்கழிநெடிலாசிரிய விருத்தம்

மஞ்சுலாவுசோலைசூழயிந்தைமன்னுமனனுசீர்
வரையெடுத்துநிரையளித்தமாசில்வாசுதேவனே! *
செஞ்சொலன்பர்சிந்தைகொண்டுதீதிலாததூதனாய்த்
தேருமூர்ந்துதேசுயர்ந்தசெல்வதெய்வநாயகா! *
வெஞ்சொலாளர்காலதூதர்வீசுபாசம்வந்தென்மேல்
விழுந்தழுந்தியானயர்ந்துவீழ்வதற்குமுன்னம் நீ *
அஞ்சலஞ்சலஞ்சலென்றளிக்கவேண்டுமச்சுதா!
அடியவர்க்குமருளியக்குமடியவர்க்குமெய்யனே! 8

கட்டளைக் கலித்துறை

பொருந்தம்பொருந்தலும் போகின்றவற்றுடன்பொய்ம்மதிமேல் *
விருததங்கலித்துறைமேவு மழன்மதம்பேறினியேன் *
திருத்தமனத்தினிற்சேரா வெமைத்தெய்வநாயக! நின் *
வருத்தம்பொறுவருளான் மன்னடைக்கலங்கொண்டருளே. 9

எண்சீர்க்கழிநெடிலாசிரிய விருத்தம்

$ அந்தமில்சீரயிந்தைநகரமர்ந்தநாத
னடியிணைமேலடியுரையாலைம்பதேத்தி *
சிந்தைகவர்பிராகிருதநூறுகூறிச்
செந்தமிழ்மும்மணிக்கோவைசெறியச்சேர்த்து *
பந்துகழலம்மானையூசலேசல்
பரவுநவமணிமாலையிவையுஞ்சொன்னேன் *
முந்தைமறைமொய்யவழிமொழிநீயென்று
முகுந்தனருள் தந்தபயன்பெற்றேனநானே. 10

அடிவரவு:—ஒருமதி மகரம் புரமுயர்த்த தேசு உருளும் வஞ்சனே மையும் மஞ்சுலாவு பொருத்தம் அந்தமில்சீர் பொய்கை.

தேசிகன் திருவடிகளே சரணம்.

---

# ப்ரபந்தஸாரம்



தனியன்

ஆசிரிய விருத்தம்

ஆரணநான்கின்பொருளை யாழ்வார்களாய்ந்தடைவே
யன்புடனேயம்புவியோ ரனைவருமீடேறவென்று
நாரணனார்தாள்களிலே நாலாயிரந்தமிழால்
நண்ணியுரைசெய்தவற்றை நாடிவகைதொகைசெய்தாய் *

பூரணமாஞானியர்சேர் பொங்குபுகழ்த்தூப்புல்வரும்
புனிதனென்றும்பிள்ளையென்றும்புவியோர் புகழ்வேங்கடவா! *
தாரணியோரிங்குய்க்கச் சாற்றியநற்ப்ரபந்தசாரந்
தனையுரைத்துவாழுமனந் தந்தருளாயென்தனக்கே. 1

ஆதிமறையோதிமகி ழயக்கிரீவர்தம்மருளால்
அன்புடனே தூப்புல்நக ரவதரித்திங்குவந்து *
வாதியரைவென்றுவந்து வண்புவிமேலெதிராசர்
வாழ்வுறுநற்றரிசனத்தை வண்மையுடனேவளர்த்து *
நீதிநெறிதவறாமல் நிறுத்தியிடும்வேங்கடவா!
நேசமுடனாழ்வார்கள் நிலைகளெல்லாமுணர்ந்து *
சாதுசனம்வாழவென்று சாற்றியநற்ப்ரபந்தசாரந்
தனையுரைத்துவாழ மனந்தந்தருளாயென்தனக்கே. 2

---

எண்சீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்

$ ஆழ்வார்களவதரித்த நாளூர்திங்க *
ளடைவுதிருநாமங்க ளவர்தாஞ்செய்த *
வாழ்வானதிருமொழிக ளவற்றுட்பாட்டின் *
வகையானதொகையிலக்க மற்றுமெல்லாம் *
வீழ்வாகமேதினிமேல் விளங்கநாளும் *
விரித்துரைக்கும்கருத்துடனே மிக்கோர்தங்கள்
நீள்பாதசிரந்தரமுந் தொழுதுவாழ்த்தும்
நேசமுடனடியேன் தன் நெஞ்சுதானே. 1

அருள்மிகுத்ததொருவடி வாயச் கச்சிதன்னில்
ஐப்பசிமாதத் திருவோணத்துநாளில் *
பொருண்மிகுத்தமறைவிளங்கப் புவியோருய்யப்
பொய்கைதனில்வந்துதித்த புனிதா! முன்னாள் *
இருளதனில்தண்கோவ லிடைகழிச்சென்று
இருவருடன்நிற்கவும் மாலிடைநெருக்க *
திருவிளக்காமென வையந்தகளிநூறுஞ்
செழும்பொருளை யெனக்கருள்செய்திருந்தநீயே. 2

கடன்மல்லைக்காவலனே! பூதவேந்தே!
காசினிமேலைப்பசியி லவிட்டநாள்வந்து *
இடர்கடியுந்தண்கோவ லிடைகழிச்சென்று
இணையில்லாமூவருமா யிசைந்தேநிற்க *
நடுவிலுமிலொருவரு மன்றறியாவண்ணம்
நள்ளிருளில்மால்நெருக்க * நந்தாஞானச்
சுடர்விளக்கேற்றிய அன்பேதகளியான
தொடைநூறுமெனக்கருள்செய்துலங்கநீயே. 3

மாமயிலைப்பதியதனில் துலாமாதத்தில்
வருஞ்சதயத் தவதரித்துக்கோவலூரில் *
தூமுனிவரிருவருடன் துலங்கநின்று
துன்னியேபேரிருள் நீங்கச்சோதிதோன்ற *
சேமமுடனெடுமாலைக் காணப்புக்குத்
திருக்கண்டேனெனவுரைத்த தேவே ! உன்தன் *
பாமருவுதமிழ்மாலை நூறுபாட்டும்
பழவடியேனுக் கருள்செய்பரம ! நீயே. 4

தைம்மகத்தில்வரும் மழிசைப்பரனே ! மற்றைச்
சமயங்கள்பலதெரிந்து * மாயோனல்லால்
தெய்வம்மற்றில்லையென வுரைத்தவேதச்
செழும்பொருநான்முகன் தொண்ணூற்றுறுபாட்டும் *
மெய்ம்மிகுத்த திருச்சந்தவிருத்தப்பாடல்
விளங்கியநூற்றிருபதுந் தப்பாமல்மெய்யே *
வையகத்தில்மறவாம லுரைத்துவாழும்
வகையடியேனுக் கருள்செய்மகிழ்ந்துநீயே. 5

$ முன்னுரைத்ததிருவிருத்தம் நூறுபாட்டும்
முறையின்வருமாசிரிய மேழுபாட்டும் *
மன்னியநற்பொருள் பெரியதிருவந்தாதி
மறவாதபடி யெண்பத்தேழுபாட்டும் *
பின்னுரைத்தோர்திருவாய்மொழியெப்போதும்
பிழையறவாயிரத்தொருநூற்றிரண்டுபாட்டும் *
இந்நிலத்தில்வைகாசி விசாகந்தன்னி
லெழிற்குருகைவருமாறு! இங்குநீயே. 6

தேறியஞானமுடன் திருக்கோளூரில்
சித்திரையிற்சித்திரைநாள் வந்துதோன்றி *
ஆறியநல்லன்புடனே குருகூர்நம்பிக்கு
அனவரதம்அந்தரங்கவடிமைசெய்து *
மாறனையல்லாலென்று மறந்துந்தேவு
மற்றறியேனெனு மதுரகவியே ! நீமுன் *
கூறியகண்ணிநுண்சிறுத்தாம்பதனிற்பாட்டுக்
குலவுபதினொன்று மெனக்குதவுநீயே. 7

பொன்புரையும் வேற்குலசேகரனே ! மாசிப்
புனர்பூசத்தெழில் வஞ்சிக்களத்தில்தோன்றி *
அன்புடனேநம்பெருமாள் செம்பொற்கோயி
லணைத்துலகின் பெருவாழ்வுமடியார்தங்கள் *
இன்பமிகுபெருங்குழுஉங் காணமண்மேல்
இருளிரியவென்றெடுத்த விசையிற்சொன்ன *
நன்பொருள்சேர் திருமொழி நூற்றைந்துபாட்டும்
நன்றாகவெனக்கருள்செய் நல்கிநீயே. 8

பேரணிந்த வில்லிபுத்தூ ரானிதன்னிற்
   பெருஞ்சோதிதனில் தோன்றும் பெருமானே ! முன் *
சீரணிந்த பாண்டியன்ற னெஞ்சுதன்னில்
   துயக்கற மால்பரத்துவந்தைத் திரமாச்செப்பி *
வாரணமேல் மதுரைவலம் வரவே வானில்
   மால்கருடவாகனனாய்த் தோன்ற வாழ்த்தும் *
ஏரணிபல்லாண்டுமுதற் பாட்டு நானூற்
   றெழுபத்தொன்றிரண்டு மெனக்குதவு நீயே. 9

$ வேயர்புகழ் வில்லிபுத்தூ ராடிப்பூரம்
   மேன்மேலும் மிகவிளங்க விட்டுசித்தன் *
தூயதிருமகளாய் வந்தரங்கனார்க்குத்
   துழாய்மாலை முடிசூடிக் கொடுத்த மாதே! *
நேயமுடன் திருப்பாவைபாட் டாறைந்தும்
   நீயுரைத்த தையொருதிங்கட் பாமாலை *
ஆயபுகழ் நூற்றுநாற்பத்து மூன்றும்
   அன்புடனே யடியேனுக் கருள்செய்நீயே. 10

மன்னுமதிள் திருமண்டங்குடிதான் வாழ
   மார்கழிமாதக் கேட்டை நாளில்வந்து *
துன்னுபுகழ்த் தொண்டரடிப்பொடியே ! நீமுன்
   துழாய்மாலைப் பணியடிமை செய்துநாளும் *
தென்னரங்க மணவாளர்க் கன்பு மிக்குச்
   செப்பிய நற்றிருமாலை நாற்பத்தைந்தும் *
பன்னிய நற்றிருப்பள்ளியெழுச்சிப் பத்தும்
   பழவடியேனுக் கருள்செய் பரிந்துநீயே. 11

உலகறிய மலிபுகழ்க் கார்த்திகைமாதத்தில்
   உரோகிணிநா ளுறந்தைவளம்பதியில் தோன்றி *
தலமளந்த தென்னரங்கர்பா லுலோக
   சாரங்க மாமுனி தோள்தனிலே வந்து *
பலமறையின் பொருளாற் பாண்பெருமாளே ! நீ
   பாதாதி கேசமதாய்ப் பாடித்தந்த *
சொல்லமலனாதிபிரான் பத்துப்பாட்டுஞ்
   சோராம லெனக்கருள்செய் துலங்கநீயே. 12

$ அறிவுதரும் பெரியதிருமொழி தப்பாமல்
   ஆயிரத்தோ டெண்பத்துநாலு பாட்டும் *
குறியதொரு தாண்டகம் நாலைந் தாறைந்தும்
   குலாநெடுந்தாண்டக மெழுகூற்றிருக்கை யொன்றும் *
சிறியமடபாட்டு முப்பத்தெட் டிரண்டும்
   சீர்பெரிய மடல்தனிற்பாட் டெழுபத்தெட்டும் *
இறையவனே ! கார்த்திகையிற் கார்த்திகைநா
   ளெழில்குறையல் வருங்கலியா ! இரங்குநீயே. 13

$ தேசமெலா முகந்திடவே பெரும்பூதூரில்
சித்திரையி லாதிரைநாள் வந்து தோன்றி *
காசினிமேல் வாதியரை வென் றரங்கர்
கதியாக வாழ்ந்தருளு மெதிராசா! முன் *
பூசுரர்கோன் திருவாய்மொழி தமுதனு ருன்
பொன்னடிமே லந்தாதி யாகப் போற்றி
பேசியநற் கலித்துறை நூற்றெட்டுப் பாட்டும்
பிழையறவே யெனக்கருள்செய் பேணி நீயே. 14

எண்ணில்முத லாழ்வார்கள் மூன்று நூறும்
எழின்மழிசைப் பிரானிருநூற் றொருபத் தாறும் *
உண்மைமிகு மாறன்மறை யாயிரத் தோடு
உற்ற விருநூற்றுக்கொண் ணூறு மாறும் *
வண்மையுடை மதுரகவி பத்துமொன்றும்
வஞ்சியர்கோ னூற்றைந்தும் பட்டநாதன் *
பண்ணிய நானூற்றெழு பத்துமூன்றும்
பார்க்கோதை நூற்றெழுபத்து மூன்றே. 15

$ பத்தரடிப்பொடிபாட லைம்பத்தைந்தும்
பாணர்புகழ் பத்துடனே பரகாலன்சொல் *
அத்தனுயர் வேங்கடமாற் காயிரத்தோ
டானவிருநூற்றுரைம் பத்துமூன்றும் *
முத்திதரு மெதிராசர் பொன்னடிக்கே
மொழிந்தவமுதார்பாடல் நூறுமெட்டும் *
எத்திசையும் வாழவிவை பாடிவைத்த
வென்பவை நாலாயிரமு மெங்கள்வாழ்வே. 16

$ வையகமெண் பொய்கை பூதன் பேயாழ்வார்
மழிசையர்கோன் மகிழ்மாறன் மதுரகவி *
பொய்யில்புகழ்க் கோழியர்கோன் விட்டுசித்தன்
பூங்கோதை தொண்டரடிப்பொடி பாணாழ்வார் *
ஐயனருட் கலியனெதிராசர் தம்மோடு
ஆறிருவ ரோரொருவரவர் தாஞ்செய்த
துய்யதமி ழிருபத்து நான்கிற்பாட்டின்
தொகை நாலாயிரமு மடியோங்கள் வாழ்வே. 17

$ அந்தமிலா வாரணங்கள் நாலாய்நின்ற
அதன்கருத்தை யாழ்வார்க ளாய்ந்தெடுத்து *
செந்தமிழா லருள்செய்த ‖ வகை தொகையுஞ்
சிந்தாம லுலகங்கள் வாழவென்று *
சந்தமிகு தமிழ்மறையோன் தூப்புல்தோன்றும்
வேதாந்த குருமொழிந்த ப்ரபந்தஸாரம் *

‖ ‘வகையுந்தொகையும் என்று’ இருப்பின் ஓசைக்குச் சேரும்.

சிந்தையினு ளனுதினமும் சிந்திப்போர்க்குச்
சேமமதாந் திருமால்தன் கருணையாலே. 18

அடிவரவு:—ஆழ்வார்கள் அருள் கடல் மாமயிலை தை முன் தேறிய பொன் பேரணி வேயர் மன்னு உலகுறிய அறிவுதரும் தேசமெல்லாம் எண்ணில் பத்தரடிப்பொடி வையகம் அந்தமிலா ஆகாரம்.

தேசிகன் திருவடிகளே சரணம்

---

நயினராசாரியர் அருளிச்செய்த

# பிள்ளையந்தாதி

---

தனியன்

சீரார் தூப்புற் பிள்ளையந் தாதியென்று செழுந்தமிழால் *
நேராக வேதாந்த தேசிகர் தாளிணைக்கீழ் மொழிந்தான் *
ஏரார் மறைப்பொரு ளெல்லா மெடுத்திவ் வுலகுய்யவே *
சீராகிய வரதாரியன் பாதந் துணை நமக்கே.

கட்டளைக் கலித்துறை

$ மாமலர் மன்னிய மங்கை மகிழ்ந்துறை மார்பினன்தாள் *
தூமலர் சூடிய தொல்லருள்மாறன் துணையடிக்கீழ் *
வாழ்வை யுகக்கு மிராமாநுசமுனி வண்மைபோற்றும் *
சீர்மைய னெங்கள் தூப்புற்பிள்ளை பாதமென் சென்னியதே. 1
சென்னி வணங்கச் சிறுபணி சோரவென் கண்ணிணைகள் *
வெந்நர கங்களுர் வீய வியன்கதி யின்பமேவ *
துன்னு புகழுடைத் தூப்புல் துரந்தரன் தாமலர்த்தாள் *
மன்னிய நாள்களு மாகுங்கொல் மாநிலத்தீர்! நமக்கே. 2
மாநிலத் தோதியமா மறை மன்னிய நற்கலைகள் *
ஆனவை செய்யு மரும்பொரு ளத்தனையே யருளும் *
தூநெறி காட்டு மிராமாநுசமுனி தோத்திரஞ்செய் *
ஊனமில் தூப்புலய்யன்றோர் புகழன்றி யுய்விலையே. 3
உய்யும் வகையில்லை யுத்தரவே தியுள் வந்துதித்த *
செய்யவள் மேவிய சீரருளாளரைச் சிந்தைசெய்யும் *
மெய்யவ னெந்தை யிராமாநுச னருள் மேவிவாழும் *
அய்யனிலங்கு தூப்புற்பிள்ளை யாய்ந்த பொருளன்றியே. 4
அன்றிவ்வுலகினை யாக்கி யரும்பொருள் நூலவிரித்து *
நின்று தன்னீள்புகழ் வேங்கடமாமலை மேவிப்பின்னும் *
வென்றிப்புகழ்த் திருவேங்கடநாத னெனுங் குருவாய் *
நின்று நிகழ்ந்து மண்மேனின்ற நோய்கள் தவிர்த்தனனே. 5
வித்தகன் வேதியன் வேதாந்ததேசிக னெங்கள்தூப்புல் *
மெய்த்தவ னுத்தமன் வேங்கடநாதன் வியன்கலைகள் *

மொய்த்திடு நாவின் முழக்கொடு வாதியர் மூலமற *
கற்றவ னென்றுரைத்தேன் கண்டிலே னென்கதிவினையே. 6

வினைகா ளுமகலினி மேவேறு ரிடந் தேடவேண்டு மெனை *
சினமேவி முன்போற் சிதைக்கும் வகை யிங்கரிதுவள்ளர்
எனிதிலிராமா நுசமுனி யின்னுரை சேர்ந்த தூப்புல் *
புனித ரென்புந்தி புகுந்து திகழ்ந்து பொருந்தினரே. 7

பொருந்திப் புவிதனிற் பொய்வாழ்க்கை பூண்கின்ற பூரியர்காள் *
இருந்து நரகி னிடர்கெடு மாற்ற மறிகின்றிலீர் *
பொருந்தும் பொருளொன்று கேளீர் பொங்குமிவ் விடர்க்கடற்கு *
வருந்தாது தூப்புல் மாபூருடன்பாதம் வணங்குமினே. 8

வணக்க மொடுக்கம் வழக்க மொழுக்க மிரக்கஞ் சேரும் *
இணக்க முறக்க மிழுக்கு மழுக்கு மிருக்குநிற்கும் *
குணக்குல மோங்கு மிராமா நுசன்குணங் கூறுந் தூப்புல் *
அணுக்கனைப் பிள்ளைதனை யரணாக வடைபவர்க்கே. 9

அடைபவர் தீவினை மாற்றி யருள்தரு தூப்புலையா! *
இடர்தரு மிப்பிறவிக்கடல்தன்னி லமர்ந்த வென்னை*
கடையறப்பாசங் கழற்றி நின் தாளிணை காணும்வண்ணம் *
உடையவனே! அருளாய் உணர்ந்தார்தங்கள் கற்பகமே! 10

கற்பகமேயென்று காசினி யோரைக் கதிக்கமாட்டேன் *
வெற்பிடையேநின்று வெந்தவத்தீயினு மேவமாட்டேன் *
பற்பல் கலைவல்ல பாவலனே! பத்த ரேத்துந் தூப்புல் *
அற்புதனே! அருளா யடியேனுக் கரும்பொருளே. 11

பொருளான தொன்று மென்னிற் பொருந்தா ததுவன்றி யந்தோ *
மருளே மிகுத்து மறையவர் நல்வழி மாற்றிநின்றேன் *
தெருளார் மறைமுடித் தேசிகனே! எங்கள் தூப்புல்தேவே!
அருளா யினியெனக்குன்னருளேயன்றி யாறில்லையே. 12

ஆறாக வெண்ணு மருங்கருமஞானங் காதல்கொண்டு *
வேறாக நிற்கும் விரகெனக்கில்லை விரத்தியில்லை *
தேறாது திண்மதி சீரார் கதியிலுஞ் செம்பொன்மேனி *
மாறாத தூப்புல் மாலே! மறவே னினி நின்பதமே. 13

நின்பதந் தன்னிலும் நேரே யெனக்கில்லை யன்பு கண்டாய் *
நின்பத மொன்றிய வன்பரிலு நேசமில்லை யந்தோ *
என்படிகண் டினியென்பய னேதமில் தூப்புலெந்தாய்! *
உன்படியே யருளா லுதவா யெனக் குன்னருளே. 14

உன்னரு ளன்றி யெனக்கொரு நற்றுணை யின்மையினால் *
என்னிரு வல்வினை நீயே விலக்கி யிதந்தருதி *
மன்னிய நற்றிருமந்திர மோதும் பொருள்நிலையே *
பொன்னருளா லருளாய் புகழ்த் தூப்புற் குலவிளக்கே. 15

விளக்காகி வேங்கட வெற்பினில் வாழும் விரைமலராள் *
வளக்காதல்கொண்டுறை மார்பன் திறத்து முனந்தடியார் *
துளக்காத வல்லவர் தங்கள் திறத்திலுந் தூய்மையெண்ணி *
களக்காதல் செய்யு நிலை கடியாய் தூப்புற் காவலனே. 16

$ காவல னெங்கள் கிடாம்பிக் குலபதி யப்புள்ளார்தம் *
தேமலர்ச் சேவடி சேர்ந்து பணிந்தவர் தம் மருளால் *
நாவலருந் தென் வடமொழி நற்பொருள் பெற்ற நம்பி *
காவல! தூப்புற் குலத்தரசே! எம்மைக் காத்தருளே. 17

$ அருள்தரு மாமணி தேசிகனே! எங்கள் தூப்புல்தேவே! *
வருகவி தார்க்கிக சிங்கமே! வாதியர் வாழ்வறுத்தாய்! *
இருகையுங் கூப்பி யுரைக்கு மிவ்விண்ணப்ப மொன்றுகேளாய் *
உருவ வெனக்கருளா யெண்ணு முள்ள முன்தொண்டரையே. 18

தொண்டருகக்குந் துணையடி வாழி நின் தூமுறுவல் *
கொண்ட முகம்வாழி வாழி வியாக்கியாமுத்திரைக்கை *
வண்டிரு நாமமும் வாழி மணிவட முப்புரிநூல் *
கொண்டசீர்த் தூப்புற் குருமணியே! வாழி நின்வடிவே. 19

$ வடிவழகார்ந்த வண்தூப்புல் வள்ளல் மென்மலரடிமேல்
அடியவ ரோத வந்தாதி யிருபது மாய்ந்துரைத்தேன் *
திடமுட னீதைத் தினந்தொறு மாவரித் தோதுமன்பர் *
முடியிடை சேர்படுந் தூப்புலம்மான் பதமாமலரே. 20

நயினாராசிரியர் திருவடிகளே சரணம்.

---

## சாத்துமறை

ஸர்வதேசதசாகாலே ஷ்வவ்யாஹதபராக்ரமாம் -
ராமாநுஜார்யதிவ்யாஜ்ஞா வர்த்ததாமபிவர்த்ததாம்.
ராமாநுஜார்யதிவ்யாஜ்ஞா ப்ரதிவாஸரமுஜ்ஜவலா -
திகந்தவ்யாபிநீ பூயாத் ஸா ஹிலோகஹிதைஷிணீ.
ஸ்ரீமந்! ஸ்ரீரங்கஸ்ரீயமநுபத்ரவாமநுதிநம்ஸம்வர்த்தய -
ஸ்ரீமந்! ஸ்ரீரங்கஸ்ரீயமநுபத்ரவாமநுதிநம்ஸம்வர்த்தய.
நமோராமாநுஜார்யாய வேதாந்தார்த்தப்ரதாயிநே -
ஆத்ரேயபத்மநாபார்யஸுதாயகுணசாலிநே.
ராமாநுஜதயாபாத்ரம் ஜ்ஞாநவைராக்யபூஷணம் -
ஸ்ரீமத்வேங்கடநாதார்யம் வந்தேவேதாந்ததேசிகம்.

## வாழி திருநாமம்

நேரிசை வெண்பா

வாழி யிராமாநுசப்பிள்ளான் மாதகவால் *
வாழு மணிநிகமாந்தகுரு—வாழியவன் *
மாறன் மறைக்கு மிராமாநுசன் பாடியமும்
தேறும்படி யுரைக்குஞ் சீர். 1

எண்சீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்

வஞ்சப்பல சமயம்மாற்ற வந்தோன் வாழியே *
மன்னுபுகழ்ப் பூதூரான் மனமுகப்போன் வாழியே *
தஞ்சத்திருமங்கை யுகக்க வந்தோன் வாழியே *
கலியனுரை குடிகொண்ட கருத்துடையோன் வாழியே *
செஞ்சொல் தமிழ்மறைகள் தெளிந்துரைப்போன் வாழியே *
திருமலைமால் திருமணியாய்ச் சிறக்கவந்தோன் வாழியே *
கஞ்சப் பரகதியைத் தந்தருள்வோன் வாழியே *
செந்தமிழ்த் தூப்புல் திருவேங்கடவன் வாழியே. 2

நேரிசை வெண்பா

நானிலமுந் தான்வாழ நான்மறைகள் தாம்வாழ *
மாநகரின் மாறன் மறைவாழ *—ஞானியர்கள்
சென்னியணி சேர் தூப்புல்வேதாந்த தேசிகரே! *
இன்னமொரு நூற்றாண் டிரும். 3

## திருவோலக்கப்பாட்டு

நேரிசைவெண்பா

வாழியணி தூப்புல் வரும் நிகமாந்தாசிரியன் *
வாழியவன் பாதாரவிந்தமலர் *—வாழியவன்
கோதிலாத் தாண்மலரைக் கொண்டாடிக் கொண்டிருக்கும் *
தீதிலா நல்லோர் திரள். 1

## திருநாள்பாட்டு

பன்னிருசீர்க்கழிநெடிலாசிரிய விருத்தம்

வாதாசனவர ரிவரென வருமா பாடியம் வகைபெறுநாள்
வகுளாபரணப் பெருமாள் தமிழின் வாசி யறிந்திடுநாள் *
பேதாபேதம் பிரமமெனுவகை பிரமந் தெளிவித்திடுநாள்
பேச்சொன்றுக்குச் சததூஷணியைப் பேசிய தேசிகநாள் *
தீதாகியபல மாயக்களைகளைச் சிக்கென வென்றிடுநாள்
திக்கெட்டும்புகழ் சீர்பாடியத்தைத் தெளிய வுரைத்திடுநாள் *
ஓதாதோதும் வேதாந்தாரிய னுதயஞ் செய்திடுநாள்
உத்தமமான புரட்டாசித் திருவோண மெனுநாளே. 1

செங்கமலத்தய னன்னவரென்று புகழ்ந்து மகிழ்ந்திடுநாள்
சீர்கொ ளிராமா நுசவெனு மந்திரம பதிகளில் வாழ்ந்திடுநாள் *
செங்கயல்வாளைகள் சேர்வயல் சூழ்ந்தவரங்கர் சிறந்திடுநாள் *
சிந்துரவெற்பிடைச் சென்று திகழ்ந்து சிரீபதிவாழ்ந்திடுநாள்

தெங்கொடு மாங்கனி தென்சுனை வேங்கடத் தீசர் பிறந்திடுநாள்
சீர்மதி யாகம பொலிவுறுந் தேசிகர் பிறந்து வளர்ந்திடுநாள் *
பங்கய மாமலர் மங்கை துணங்களைத் தெளிய வெளியிடு நாள்
பார்திகழ் பாத்திரபதத் திருவோண மெனுந் திருநன்னாளே.
தேசிகன் திருவடிகளே சரணம்.

---

## ஆண்டாள் வாழி திருநாமம்

வேதப்பிரான்பட்டர் அருளிச்செய்தவை

நேரிசைவெண்பா

கோதை பிறந்தவூர் கோவிந்தன் வாழுமூர் *
சோதி மணிமாடந் தோன்றுமூர் *—நீதியால்
நல்லபத்தர் வாழுமூர் நான்மறைகளோதுமூர் *
வில்லிபுத்தூர் வேதக்கோனூர். 1

பாதகங்கள் தீர்க்கும் பரமனடிகாட்டும் *
வேதமனைத்துக்கும் வித்தாகும் *—கோதைதமிழ்
ஐயைந்து மைந்தும் அறியாத மானிடரை *
வையம் சுமப்பதும் வம்பு. 2

எண்சீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்

திருவாடிப் பூரத்துச் செகத்துதித்தாள் வாழியே *
திருப்பாவை முப்பதும் செப்பினாள் வாழியே *
பெரியாழ்வார் பெற்றெடுத்த பெண்பிள்ளை வாழியே *
பெரும்பூதூர் மாமுனிக்குப் பின்னானாள் வாழியே *
ஒருநூற்று நாற்பத்து மூன்றுரைத்தாள் வாழியே *
உயரரங்கர்க்கே கண்ணி யுகந்தளித்தாள் வாழியே *
மருவாரும் திருமல்லி வளநாடி வாழியே *
வண்புதுவை நகர்க்கோதை மலர்ப்பதங்கள் வாழியே. 3

## தேசிகன் திருநக்ஷத்திரம்

𑌕𑌨𑍍𑌯𑌾॥ 𑌕𑌨𑍍𑌯𑌾𑌶𑍍𑌰𑌵𑌣𑌸𑌂𑌭𑍂𑌤𑌂 𑌘𑌣𑍍𑌟𑌾𑌂𑌶𑌂 𑌵𑍇𑌙𑍍𑌕𑌟𑍇𑌶𑌿𑌤𑍁𑌃।
𑌶𑍍𑌰𑍀𑌮𑌦𑍍𑌵𑍇𑌙𑍍𑌕𑌟𑌨𑌾𑌥𑌾𑌰𑍍𑌯𑌂 𑌵𑌨𑍍𑌦𑍇 𑌵𑍇𑌦𑌾𑌨𑍍𑌤𑌦𑍇𑌶𑌿𑌕𑌮𑍍॥
𑌤𑍁𑌲𑌾॥ 𑌤𑍁𑌲𑌾𑌯𑌾𑌂𑌶𑍍𑌰𑌵𑌣𑍇𑌜𑌾𑌤𑌂 𑌕𑌾𑌞𑍍𑌚𑍍𑌯𑌾𑌂𑌕𑌾𑌞𑍍𑌚𑌨𑌵𑌾𑌰𑌿𑌜𑌾𑌦𑍍𑌦𑍍𑌵𑌾
𑌪𑌰𑍇𑌪𑌾𑌞𑍍𑌚𑌜𑌨𑍍𑌯𑌾𑌂𑌶𑌂 𑌸𑌰𑍋𑌯𑍋𑌗𑌿𑌨𑌮𑌾𑌶𑍍𑌰𑌯𑍇॥

கந்யாஸ்ரவணஸம்பூதம்கண்டாம்ஸாம் வேங்கடேசிது:
ஸ்ரீமத்வேங்கடநாதார்யம் வந்தேவேதாந்ததேஸிகம்.
துலா-துலாயாம்சிரவணேஜாதம்காஞ்சியாம்காஞ்சநவாரிஜாத்த்வா
பரேபாஞ்சஜன்னியாம்சம ஸரோயோகிநமாஸ்ரயே.

நித்யாநுஸந்தாநம் ஸம்பூர்ணம்.